KALKI
8.2006 ரூ.8.00
80 பக்கங்கள்

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

அமரர் கல்கி
னைவுச் சிறுகதைப்
போட்டியில்
ரூ.10,000
ரிசு பெறும் கதை!

EXCLUSIVE

## காதல்... கல்யாணம்... கடமை...

- மனம் திறக்கிறார்
சூர்யா

# ஒரே கூரையின் கீழ் - கண்பார்வைக் குறைபாடுகளுக்கு முழுமையான தீர்வுகள்

ஐயோ,
சின்ன வயசிலேயே
கண்ணாடியா?
பயப்பட வேண்டாம் -
லாசிக் சையோப்டிக்ஸ்
சிகிச்சை இருக்கு!

சாளேசுவரத்துக்கு,
அதான் வெள்ளெழுத்துக்கு -
கண்ணாடியே போட வேண்டாம்!
அட, எப்படி?
கண்டக்டிவ் கெரடோபிளாஸ்டி
பண்ணிக்கிட்டா போதுமே!

ஹும்... எனக்கு லாசிக்
சிகிச்சை பண்ண
முடியாதாமே?
அதுக்கென்ன, எபிலாசிக்
சிகிச்சை பண்ணிக்கலாமே!

காடராக்ட் சிகிச்சைக்குப் பிறகு
எந்தக் கண்ணாடியும் போட
வேண்டாம், தெரியுமா?
எப்படி?
ஆமா, மல்ட்டி ஃபோகல், ரீஸூம்,
டெக்னிஸ் லென்ஸ்கள்
பொருத்தினா போதும்!

எனக்கு மைனஸ் - 20
இருக்கே? லாசிக் சையோப்டிக்ஸ், எபிலாசிக்
இரண்டுமே செய்ய முடியாதாம்!
கவலையே வேண்டாம்...
ஃபேகிக் ஐ.ஓ.எல். சிகிச்சை இருக்கவே
இருக்கு!

அனுபவமும், திறமையும் உள்ள எங்கள் கைகளில் உங்கள் கண்கள் பாதுகாப்பாக இருக்கும்!

**Dr. D. ராமமூர்த்தி, Dr. சித்ரா ராமமூர்த்தி**




**THE EYE FOUNDATION**
582 – A, D.B. Road, R.S. Puram, Coimbatore – 641002
Tel: 0422 – 2544242, 2544243, 4366634, 4366644
Fax: 0422 – 2542702

**THIRUMURTHY NETHRALAYA**
209, Avinashi Road, Tirupur – 641603
Ph: 0421 – 2474242 - Fax: 0421 - 2479292

**THE EYE FOUNDATION**
SEVANA HOSPITAL,
Pattambi – 679313, Kerala
Ph: 0466 - 3202111

Email: eyefoundation@vsnl.net
Website: www.theeyefoundation.com www.lasik-india.com

அடுத்த இதழில் ஆரம்பம்...



## அமரர் கல்கியின்

# சிரிப்புச் சந்தை!



சிரித்தே
தீரவேண்டிய
நகைச்சுவைக்
கதைகளின் அணிவகுப்பு!

## உள்ளே...





# சிறுகதை சகாப்தம் முடிந்துவிட்டதா?

சிறுகதைகள் ஒரு பக்கம், அரை பக்கம்னு மெல்ல மெல்ல சுருங்கிக்கிட்டே வருது. வணிகப் பத்திரிகைகளால தரமான சிறுகதைகளைத் தரமுடியலை. சினிமா, அரசியல், பேட்டிகள், கிசுகிசுன்னு போட்டுப் பக்கங்களை நிரப்பிடறாங்க. இதுல சிறுகதைக்கு எங்கே இடம் ஒதுக்க முடியும்? எந்தப் பத்திரிகைல இப்போ தரமான சிறுகதைகள் வருது?

சிறுபத்திரிகைகளைப் புரட்டுனா அவங்க பிரச்னை வேற. வணிக இதழ்களால செய்ய முடியாத பல விஷயங்களை சிற்றிதழ்களால செய்ய முடியும். ஒரு குறிப்பிட்ட வாசகர் வட்டத்துக்குப் போய்ச் சேரணும்ங்கிறதுதான் ஒரு சிற்றிதழோட நோக்கம். புதிய எழுத்துகள் நிறைய தோன்றுவதற்கும், நல்ல தரமான இலக்கியப் படைப்புகள் பெருகுவதுக்கும் சிற்றிதழ்கள் உதவ முடியும்.

ஆனால் எல்லாப் பத்திரிகைகளும் அப்படிச் செய்யறதில்லை. தேவையில்லாத சர்ச்சைகள், தேவையில்லாத சண்டைகள், கோஷ்டி மோதல்கள்னு சிறு பத்திரிகையோட இலக்கணமே மாறிட்டு வருது. கருத்து வேறுபாடுகள், சர்ச்சைகள் இருக்கிறது தப்பில்லை. ஆனா தனிப்பட்ட முறையில் நீயா நானா, போட்டியா மாறும்போது பிரச்னை வெடிக்குது. எழுத்தாளரோட ஜாதி பேரைச் சொல்லித் திட்டற அளவுக்கு இறங்கிப்போயிடறாங்க. இது வருத்தப்பட வேண்டிய விஷயம்.

நாவலுக்கான வரவேற்பும் குறைஞ்சிக்கிட்டே இருக்கு. இப்போ நீங்க ஏதாவது ஒரு பதிப்பகத்துக்கு போய் ஒரு நாவலைக் கொடுத்து பப்ளிஷ் பண்ணச் சொன்னா அவங்க கேட்கிற முதல் கேள்வி, 'இந்த நாவல் இதுக்கு முன்னாடி தொடர் கதையா வந்திருக்கா?' ஏற்கெனவே, தொடரா வந்திருந்தா அந்த நாவலுக்கு மதிப்பு கூடும். 'இல்லை இப்போதான் புதுசா எழுதியிருக்கேன்'னு நீங்க சொன்னீங்கன்னா, அவங்க கொஞ்சம் யோசிப்பாங்க. காரணம் ரசனை. நமக்குப் பிடிச்ச படங்களை மீண்டும் மீண்டும் பார்க்கிறோம் இல்லையா. அதே மாதிரி ஏற்கெனவே தொடரா வந்ததை திரும்



இந்திரா பார்த்தசாரதி

பவும் படிக்க நிறைய பேர் விரும்பறாங்க. இதைத் தப்புன்னு சொல்லவும் முடியாது.

சிறுபத்திரிகைகள்ல வர்ற சிறுகதைகள்ல நிறைய பரிசோதனைகள் செய்யறாங்க. நாவல் லயும் இதே கதைதான். நான் இன்னிக்கு ஒரு போஸ்ட் மார்டனிசம் புக் எழுதப்போறேன்னு முடிவு செஞ்சி எழுதினா அந்த புக் எப்படி நல்லா வரும்? லத்தீன் அமெரிக்காவில் எழுதறாங்கன்னா அது வேற, எழுத எழுத கதையோட போக்கை அதுவே தீர்மானிச்சுக்கும். அப்படி எழுதினாதான் நாவல் சரியா வரும். அப்படி எழுதப்பட்ட நாவல்தான் ஜெயிக்கும். எப்படி சொல்றோம்ங்கற விஷயத்துக்கு தேவைக்கு அதிகமான முக்கியத்து வம் கொடுத்தா அப்புறம் என்ன சொல்றோம்ங் கன்ற விஷயம் அடிப்பட்டுடும்.

எல்லாத்துக்கும் அடிப்படை ரசனை. ரசனை யில் அமெரிக்காவுக்கும் ஐரோப்பாவுக்கும் இந்தியாவுக்கும் பெரிய வித்தியாசம் கிடை யாது.

இங்கே மாதிரியே அங்கேயும் துப்பறியும் கதை கள், லைட் ஃபிக்ஷன் கதைகள் எக்கச்சக்கமா கிடைக்கும். நல்ல நாவல்கள், சிறுகதைகளைத் தேடிப்பிடிச்சு வாங்கிப் படிக்கிறவங்களும் எல்லா இடத்திலயுமே இருக்காங்க. என்ன ஒரு வித்தி யாசம்னா அங்கே நல்ல புக்ஸை நிறையப் பேர் வாங்குவாங்க. ஷேக்ஸ்பியர், டால்ஸ்டாய்னு நிறைய க்ளாஸிக்ஸ் வாங்கி வீட்டுல வச்சிக் கணும்னு ஆசைப்படுவாங்க. வீட்டுல ஒரு லைப்ரரி இருக்கணும்னு விரும்புவாங்க. இங்கே அப்படி இருக்கிறதா தெரியலை.

சரி வாங்க வேண்டாம். லைப்ரரியில போய் படிக்கலாம்னா தேடற புக் கிடைக்குதா? அமெரிக்கா, ஆஸ்திரேலியான்னு எந்த வெளி நாட்டை எடுத்துக்கிட்டாலும் லைப்ரரீஸை நீட்டா மெயின்டெய்ன் செய்யறாங்க. நீங்க எந்த புக் கேட்டாலும் எடுத்துக் கொடுப்பாங்க. ஒருவேளை இல்லேன்னா, அவங்களே அந்த புக்கை தேடிப்பிடிச்சுக் கொண்டுவந்து கொடுப் பாங்க. இங்க நிறைய லைப்ரரீஸ்ல குப்பை புத் தகங்கள்தான் இருக்கு. இதுலயும் அரசியல். எந்தக் கட்சி ஆட்சியில் இருக்கோ, அவங்க சொல்ற புத்தகங்களைத்தான் வாங்கி வைப்பாங்க. நாம தேடற புத்தகம் கிடைக்காது. இந்த நிலைமை மாறணும். ○




# கல்கி

ஒவ்வொரு இதழும் உங்கள் வேண்டுகைக்கு

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ், 47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் : சீதா ரவி

உதவி ஆசிரியர் : மு.மாறன்

வடிவமைப்பு : எஸ். ஸ்டீஃபன், பி.ஆர். ராஜன், ச. கார்த்திகேயன்

தொலைபேசி : 2225 1522, 2225 0623, 2225 1324

தொலைநகல் : 044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு : kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு : subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு : info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.



இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

# நான்... ஜோதிகா... கல்யாணம்!

**சூப்பர் ஃபாஸ்டில் தமிழ் சினிமாவின் முன்னணிக்கு வந்தவர் சூர்யா! 'இவருக்குள் இப்படி ஒரு திறமையா' என்று பலரையும் வியக்க வைத்தவர். நெடுநாட்களாக மீடியாவை தவிர்த்து வந்தவர், இப்போது மறுபடியும் மீடியா ஃப்ரெண்டாகிவிட்டார். நாமும் சந்தித்தோம்.**

**நீங்கள் எதிர்பாராத விதமாக சினிமாவுக்கு வந்தவர். இப்போது, நடிப்பு உங்களுக்குப் பிடித்த விஷயமாக ஆகி விட்டதா?**

"நான் சினிமாவில் அறிமுகமான போது, நடிகர் சிவகுமாரின் மகன் என்று தான் அறியப்பட்டேன். எனக்கென்று ஒரு தனிமுகம் கிடையாது. நான் சினிமாவுக்கு வருவேன் என்று நினைக்கவில்லை. சினிமாவுக்கு வந்தாலும், எனக்கென்று ஒரு இடத்தை என்னால் ஏற்படுத்திக் கொள்ள முடியும் என்ற நம்பிக்கை எனக்கு இல்லை. நாலுபேரை, என் பேச்சு சாமர்த்தியத்தால் கன்வின்ஸ் பண்ணும் திறமை எனக்குக் கிடையாது. சினிமா நடிகனுக்குரிய பர்சனாலிட்டிகூட எனக்கு இல்லை என்பது என்னுடைய எண்ணம். ஆனால், கடந்த எட்டு ஆண்டுகளில் சினிமா உலகில் எனக்கு ஏற்பட்ட அனுபவங்கள், எனக்குள் நிறைய மாற்றங்களை ஏற்படுத்தி உள்ளன.

தொள்ளாயிரம் ரூபாய் மாசச் சம்பளம் வாங்கிக்கொண்டிருந்த நான், இன்று மாசத்துக்குப் பல லட்சம் சம்பாதிக்கும் அளவுக்கு வளர்ச்சி பெற்றிருப்பது அசாதாரணமான விஷயம். சினிமாவுக்கு வராமல் இருந்திருந்தால், நான் வேலை பார்த்த கார்மென்ட் தொழிலிலேயே இருந்திருப்பேன். ஒரு கார்மென்ட் யூனிட் வைத்து ஐந்நூறு பேருக்கு வேலை கொடுத்திருப்பேன். நிச்சயமாக அந்த சரவணனைவிட, இந்த சூர்யா பிரகாசமாக இருக்கிறேன் என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்வார்கள். இன்று எனக்கு நடிப்பு மிகவும் பிடிக்கிறது. சந்தோஷத்தைக் கொடுக்கிறது."

**உங்கள் அப்பா நீங்கள் நடிக்கும் படக் கதை, கேரக்டர் பற்றியெல்லாம் கேட்பாரா? படம் பார்த்ததும் பாராட்டுவாரா? விமர்சனம் செய்வாரா?**

"கதை, கேரக்டர் பற்றியெல்லாம் பேசவே

மாட்டார். படம் பார்த்தவுடன், முதலில் டைரக்டருடன் தான் பேசுவார். அப்புறம் தான் என்னைப் பாராட்டுவார். நான் நடித்த பேரழகன் படம் எதிர்பார்த்த அளவுக்கு வெற்றி பெறாத சமயம், நான் கொஞ்சம் வருத்தப்பட்டுப் பேசியபோது, 'மனசு தளராதே! நீ செய்துள்ள கேரக்டர் அவ்வளவு எளிதில் யாராலும் செய்யக் கூடியது இல்லை. பல வருடங்களுக்குப் பிறகும், அந்தப் படத்தைப் பற்றிப் பேசுவார்கள்' என்று ஊக்கம் அளித்துப் பேசினார். அப்படித்தான் நடந்தது. அவர் சரியான காரியத்தை, சரியான நேரத்தில் செய்வார்."

**நீங்கள் நன்றாக நடிக்கிறீர்கள்; வெற்றிப் படங்களைத் தருகிறீர்கள். ஆனால் உங்களால் நம்பர் 1 இடத்தைப் பிடிக்க முடியவில்லையே?**

"நம்பர் ஒன் ரேசில் எனக்கு நம்பிக்கை கிடையாது. மீடியா ஏற்படுத்தும் ஒரு பரபரப்புதான் இந்த நம்பர் ரேஸ். ஒரு படம் நடித்தால், அதில் எல்லோரும் லாபமடைய வேண்டும். இதில் தியேட்டரில் சைக்கிள் ஸ்டாண்டு நடத்துபவர் முதல் தயாரிப்பாளர் வரை அத்தனை பேரும் அடக்கம். அப்படி ஒரு லாபத்தை ஒரு படம் சம்பாதித்துக் கொடுக்கவில்லை என்றால், எல்லோரும் என்னைத்தான் குறை சொல்லுவார்கள்."

**ரசிகர் மன்றங்களை உங்கள் அப்பா ஊக்கப்படுத்தியதில்லை. ஆனால், நீங்கள் ரசிகர் மன்றங்களைப் பெரிய அளவில் வளர்த்து விட்டிருக்கிறீர்கள். இதற்கு என்ன காரணம்?**

"நாடு முழுவதும் எனக்கு ரசிகர் மன்றங்கள் இருக்க வேண்டும் என்று நான் எந்த முயற்சியும் எடுத்தது இல்லை. என் ரசிகர்கள் சிலர் ஒன்று சேர்த்து, மன்றம் அமைக்கிறபோது, நான் அதைத் தடுக்கவும் விரும்பவில்லை. நான் அவர்களுக்கு எப்போதும் சொல்வது இது தான்: என்னை சந்தோஷப்படுத்துவதற்காக போஸ்டர் ஒட்டுவதும், விழா எடுப்பதும் அவசியமில்லை. ஒரு மனிதனின் வாழ்க்கையில் இருபது முதல் முப்பது வயசுவரை மிக முக்கியமான கால கட்டம். அது வெறும் 3650 நாட்கள்தான். அதை வீணாக்காதீர்கள். படிக்காமலோ, வேலைக்குப் போகாமலோ, பெற்றோரின் எதிர்பார்ப்பைப் பூர்த்தி செய்யாமலோ, ரசிகர் மன்றம் என்று சொல்லிக் கொண்டு திரிந்து நேரத்தை வீணாக்காதீர்கள்!"

**இன்று சினிமாக்களில் வன்முறை, இனக் கவர்ச்சி, தவறான விஷயங்களை**

# - மனம் திறக்கிறார் சூர்யா



**நியாயப்படுத்துதல் போன்றவை அதிகமாக உள்ளன. இந்தப் போக்கு சரியா?**

"இந்தச் சமூகத்தில் அனைத்துத் தரப்பினருக்குமே பொறுப்புணர்வு மிகவும் முக்கியம். சமூகத்தில் அபரிமிதமான தாக்கத்தை ஏற்படுத்தும் சக்தி படைத்த சினிமாவுக்கும் இது பொருந்தும். மற்றவர்களைவிட டைரக்டர்களுக்கும், அவர்களைவிட ஹீரோக்களுக்கும் ரொம்பப் பொருந்தும். அதனால்தான், புகைபிடிக்கும் காட்சிகளை நான் தவிர்க்கிறேன். மது அருந்தும் காட்சி, கதைக்கு மிகவும் அவசியமாக இருந்தால் கூட, அதை முடிந்த அளவுக்குக் குறைத்துக் கொள்கிறேன். நிச்சயமாக நான் எம்.ஜி.ஆர். இல்லை என்றாலும், படத்தின் மூலமாக எந்த அளவுக்கு பாசிட்டிவான கருத்துகளைச் சொல்ல முடியுமோ, அந்த அளவுக்குச் சொல்லிக் கொண்டுதான் இருக்கிறேன்."

**இந்தியில் இரண்டு, மூன்று ஹீரோக்கள் ஒன்று சேர்ந்து நடித்து படங்கள் வருகின்றன. ஆனால், இங்கே அப்படி வருவதில்லையே. ஈகோதான் இதற்குக் காரணமா?**

"இந்தியில் மார்க்கெட் பெரியது. இரண்டு மூன்று ஹீரோக்களை வைத்துப் பிரம்மாண்டமாகப் படம் எடுத்தால் வட இந்தியா முழுவதும் ஓடுகிறது. ஆனால் தமிழ் மார்க்கெட் அப்படி இல்லை. இது ஒரு பொதுவான காரணம். ஒரு ஹீரோவை வைத்துப் படம் எடுக்கும்போது சுமார் 150 பேருக்கு வேலை கிடைக்கிறது. அதுவே இரண்டு ஹீரோக்கள் நடிக்கும் படமானால் இன்னொரு 150 பேருக்குக் கிடைக்க வேண்டிய வேலை, இல்லாமல் போய்விடுகிறது. இதுவும் கூட ஒரு காரணம். என்றாலும், தனிப்பட்ட முறையில் என்னை இப்படிக் குறை சொல்ல முடியாது. நான் அறிமுகமான 'நேருக்கு நேர்'படம் இரண்டு ஹீரோ கதைதான். 'ஆயுத எழுத்து' மூணு ஹீரோ கதை. பிதாமகனில் விக்ரமுடன் சேர்ந்து நடித்தேன். பேரழகனில் ஜோதிகாவை இன்னொரு ஹீரோ என்று சொல்லும் அளவுக்கு கதையில் முக்கியத்துவம் உண்டு. ஃப்ரெண்ட்ஸ் படம் பண்ணி இருக்கிறேன். ஆய்த எழுத்தில் நடித்த போது, மணி சார், 'சூர்யா! படத்துல இருக்கும் மூணு கேரக்டர்களில் உனக்கு எதைக் கொடுத்திருந்தாலும் நன்றாக நடித்திருப்பாய். ஆனால், மைக்கேல் ரோலுக்கு நான் வேறு யாரையும் போட முடியாது' என்று சொன்னார். அது எனக்குப் பெருமையாக இருந்தது."



**ரஜினி, கமலை எப்படிப் பார்க்கிறீர்கள்?**

"எனது கஜினி படம் பார்த்துவிட்டு, இரண்டுபேருமே என்னை ரொம்பப் பாராட்டினார்கள். ரஜினி சார் 'எனக்கு அண்ணாமலை மாதிரி, உனக்கு கஜினி. இனிமேல் உன்னைப் பார்க்கக் கூலித் தொழிலாளர்களும் வருவாங்க, ஃபேமிலி ஆடியன்சும் வருவாங்க; காலேஜ் ஸ்டூடன்சும் வருவாங்க. எல்லாருக்கும் பிடிச்ச மாதிரி படம் பண்ணு' என்று அறிவுரை சொன்னார். கமல் சார், 'என்னை மாதிரியே நீயும் ஒவ்வொரு படத்துலேயும் ஏதாவது புதுசா செய்யணும்னு முயற்சி செய்யறே. தொடர்ந்து செய்' என்று வாழ்த்தினார். 'காக்க காக்க' படத்துல என் நடிப்பை கமல் சார் பாராட்டினார். அவங்க இரண்டு பேருமே எனக்கு காட்ஃபாதர் மாதிரி. எனக்கு என் மேலேயே சில சமயம் கோபம் வரும். முப்பத்திரண்டு வயசாயிட்டது. ஆனால் ஒரு நடிகனாக என்னுடைய நடிப்பை, சினிமா பற்றின அறிவை போதுமான அளவுக்கு நான் வளர்த்துக் கொள்ளவில்லை என்று நான் நினைக்கிறேன். 'காதல் கொண்டேன்', 'புதுப் பேட்டை' ஆகிய படங்களைப் பார்க்கிறபோது,

வழங்குகிறோம்

அதிக ஊட்டச்சத்தும், சுவையும், மணமும் கொண்ட

# உலகின் முதல் குண்டு சாம்பார் பருப்பு.

Shree
# JEYYAM
SAMBAR DHALL

Q3 ADVANTAGE





முளை நீக்கப்படாததால் அதிக சுவை, மணம் மற்றும் ஊட்டச்சத்து கொண்டது.


விரைவாக வேகும் திறன் கொண்டது.


சாதாரண பருப்பு 3 கிலோ வாங்குமிடத்தில், ஜெய்யம் குண்டு சாம்பார் பருப்பு 2 கிலோவே போதுமானது.

**Asian Dhall Industries Ltd.** Omalur By-Pass Road, Omalur, Salem - 636 455, Tamil Nadu.
Ph: 04290-222921 / 22, Telefax: 04290-222911 E-mail: asiandhall@vsnl.net Website: www.asiandhall.com

An ISO 9001 Company



CRAYONS

என்னைவிட வயதில் குறைந்த தனுஷின் நடிப்பும், உடல்மொழியும், சாதனைகளும் என்னை வியக்க வைக்கின்றன. லேசாகப் பொறாமைப்பட வைக்கின்றன."

**தமிழ், தெலுங்கு என்பதைத் தாண்டி, மலையாளம், இந்தி என்று உங்கள் வட்டத்தை விரிவுபடுத்திக் கொள்ளும் ஆர்வம் உங்களுக்கு இருக்கிறதா?**

"ஆயிரத்து ஐந்நூறு கோடிக்கு மேல் பிசினஸ் செய்யும் மாபெரும் நிறுவனங்கள், என்னைத் தங்கள் நிறுவனத்தின் "brand ambassador"-ஆக ஒப்பந்தம் செய்திருக்கிறார்கள். இதுகூட அகில இந்திய அளவில் என்னை விரிவுபடுத்திக் கொள்ளும் ஒரு முயற்சிதான். அதேசமயம், தெரியாத ஒரு மொழியில் படம் நடிப்பது என்பதை என்னால் அவ்வளவு எளிதாக ஏற்றுக்கொள்ள முடியவில்லை. வேறு மொழியில், மிகப் பிரத்யேகமான ஒரு முயற்சி, அதற்கு நான் பொருத்தமாக இருப்பேன் என்கிற பட்சத்தில் அப்படி ஒன்றிரண்டுக்கு ஓ.கே. சொல்லுவதில் எனக்கு ஆட்சேபணையில்லை. தமிழை விட்டுவிட்டு, வேறு ஒரு மொழிக்குப் போய் அங்கே என்னால் கால் ஊன்ற முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை."

**இன்று சினிமாவில் சம்பாதிக்கும் பணத்தை பல்வேறு துறைகளில் சினிமாக்காரர்கள் முதலீடு செய்கிறார்கள். நீங்கள் எப்படி?**

"நான் காற்றாலை மூலம் மின்சாரம் தயாரிக்கும் திட்டத்தில் முதலீடு செய்திருக்கிறேன். தமிழ்நாட்டில்தான் அதை நிறுவ விரும்பினேன். ஆனால், சில காரணங்களால் பெங்களூரில் முதலீடு செய்திருக்கிறேன். எதிர்காலத்தில் ஆயிரத்து ஐந்நூறு பேருக்கு வேலை கொடுக்கிற அளவுக்கு, கோவையில் ஒரு டெக்ஸ்டைல் மில் ஆரம்பிக்க ஆசை உள்ளது."

**உங்கள் அப்பா கிசுகிசுவில் சிக்கிக் கொள்ளாதவர் என்று பெயர் எடுத்தவர். ஆனால், உங்களால் அப்படிப் பெயர் வாங்க முடியாமல் போய்விட்டதே...?**

"அப்போது இருந்த மீடியாவும், இப்போதுள்ள மீடியாவும் ஒன்று என்று நீங்கள் நினைக்கிறீர்களா? இப்போது தனி நபர் சுதந்திரம், உண்மை இவற்றைவிட வியாபாரம், பரபரப்பு, கழுத்தை நெரிக்கும் போட்டி போன்றவற்றுக்கு முக்கியத்துவம் கொடுக்கிறார்கள். நான் பேட்டியே தராத, தர மறுத்துவிட்ட பத்திரிகைகள், என் பேட்டி என்று எதை எதையோ வெளியிட்டிருக்கின்றன."



**ஜோதிகா?**

"ஒரு விஷயத்தை நான் தெளிவுபடுத்த விரும்புகிறேன். நான் பல பெண்களுடன் இஷ்டப்படி ஊர் சுற்றியதில்லை. மாசத்துக்கு ஒரு பெண் என்று மாற்றினவனுமில்லை. எனக்கும் ஜோதிகாவுக்கும் இடையிலான நட்பு அல்லது அதற்கும் மேலே எப்படி வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளலாம். அதை மதிக்கிறேன். எனக்கும் மனசாட்சி உண்டு. நான் யாருக்கும் எந்தக் கெடுதலும் செய்யவில்லை. என் வாழ்க்கையை எப்படி வெற்றிகரமாகவும், மகிழ்ச்சியாகவும் அமைத்துக் கொள்ள வேண்டும் என்று எனக்குத் தெரியும்."

**சரி, எப்போது உங்கள் கல்யாணம்?**

"கூடிய சீக்கிரத்தில் நடக்கும்."

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

அட்டை, படங்கள் : **ஸ்ரீஹரி**

# திரை உலக எவரெஸ்ட் சிகரம்!

கி.ராஜேந்திரன்

திரு. கி.வா.ஜகந்நாதன் கேட்டுக் கொண்டதன்பேரில், அவர் தலைமையில் பொருளாளராகச் செயல்பட்டு, வறுமையின் பிடியில் சிக்கியிருந்த எழுத்தாளர்களுக்காக இரண்டு சந்தர்ப்பங்களில் நிதி திரட்டினேன்.

இதையொட்டி ஒருமுறை ஏவி.எம். அவர்களை நேரில் சந்திக்க வேண்டிய வாய்ப்பு ஏற்பட்டது.

"கடிதம் எழுதி கோரிக்கை வைத்திருந்தேன்; உங்கள் கவனத்துக்கு வந்ததா, தெரியவில்லை..." என்று பேச்சை ஆரம்பித்தேன்.

"கல்கியின் மகன் நேரில் வந்திருக்கே; இல்லேன்னு சொல்வேனா?" என்று கேட்டுவிட்டு, மெய்யப்பன் அவர்கள் 'செக்' புக்கை வரவழைத்து, எழுதிக் கையெழுத்திட்டுத் தந்தார். அந்த நாளில் ரூ.2000/- என்பது இன்று ரூ.20,000 போல! கல்கி அவர்களைப் பற்றி நிறையப் பேசினார். பணமும் நிறைய, மனமும் நிறைய வீடு திரும்பினேன்.

மறுநாள் காலை தபாலில் மெய்யப்பன் அவர்களிடமிருந்து ஒரு கடிதம். அத்துடன் ரூபாய் இரண்டாயிரத்துக்கு ஒரு காசோலை! 'தபாலில் அனுப்பியது நினைவில்லாமல் மறுபடி நேரில் என்னிடம் காசோலை தந்துவிட்டாரே' என்று எண்ணி போன் செய்தேன்.

''மறதி ஒன்றுமில்லை; தபாலில் அனுப்பிய செக்கில் காலையிலேயே கையெழுத்துப் போட்டு தபாலிலும் சேர்த்தாகிவிட்டது. மாலை நீ வந்தபோது உன்னை வெறுங்கையுடன் திருப்பியனுப்ப மனமில்லை. இரண்டு நன்கொடைகளையுமே ஏற்றுக்கொள்ளுங்கள்'' என்றார் ஏவி.எம்!

முன்னர் பாரதி மணிமண்டப நிதிக்கு மெய்யப்பன் அவர்கள் ரூ.3000/- தந்தபோது தமக்குத் 'தூக்கி வாரிப் போட்ட'தாக எழுதினார் கல்கி. இப்போதோ எனக்குத் 'தூக்கித் தூக்கி வாரிப் போட்டது!'

ஏவி.மெய்யப்பன் அவர்கள் ஓர் அபூர்வமான, உன்னதமான மனிதர் என்பதற்கு இதைப் போல எத்தனையோ எடுத்துக்காட்டுகளை அவருடன் பழகியவர்கள் நினைவு கூர்வார்கள். எளிய நிலையிலிருந்து உழைத்துப் பாடுபட்டு உயர்ந்த ஏவி.எம்., 'முயற்சி திருவினையாக்கும்' என்பதில் அசைக்க முடியாத நம்பிக்கை உடையவர். அதைவிடப் பெரிய விஷயம், தாம் ஈடுபட்டிருந்த திரைப்படத் தொழிலை சமுதாய நலனுக்குப் பயன்படுத்த முடியும்;





• 'வாழ்க்கை'

'கல்கியின் நம்பிக்கை வீண் போகவில்லை!'

பயன்படுத்த வேண்டும் என்பதில் அவருக்கு இருந்த தளராத நம்பிக்கை.

இதனால் அமரர் 'கல்கி' அவர்களுக்கு ஏவி.எம். அவர்களிடம் பெருமதிப்பு இருந்து. 'கல்கி' அவர்களால் ஒரு முறை பாராட்டப் பெற்றவர்களே அதைப் பெரிய கௌரவமாக எண்ணி மகிழ்வார்கள். ஏவி.எம். அவர்களோ 'வசிஷ்டர் கையால் பிரும்மரிஷி' என்று பலமுறை எழுதப்பட்டார்!

நகைச்சுவை கலந்து எழுதுவதில் மன்னரான 'கல்கி'க்கு முழுநேர ஹாஸ்யப் படமான 'சபாபதி', ரொம்பப் பிடித்துப் போனது. 'நிஜமாகவே மேனாதான் அதை டைரக்ட் செய்தாரா?' என்று நடிகர் கே.சாரங்கபாணியிடம் கேட்டு உறுதிப்படுத்திக் கொண்டாராம் கல்கி!

'வாழ்க்கை' படம் வெளியானபோது சபாபதியை மறுபடியும் நினைவு கூர்ந்தார் 'கல்கி'. எழுதினார்:

'சபாபதி படத்தை நாம் மறக்கவே முடியாது. அதில் அத்தனை உயர்தர ஹாஸ்யமும் நடிப்புத் திறமையும் ததும்பியிருந்தன. படம் நல்ல படமாயிருந்தாலும் பணம் அதில் அதிகம் கிடைக்கவில்லை. அதனால் 'உயர்தர படம் கொண்டு வந்தால் 'மேனா'வுக்கு நேர்ந்த கதிதான்' என்று பட முதலாளிகள் சொல்லும்படி ஆயிற்று.

'ஆனால் மெய்யப்பச் செட்டியார் தமது இலட்சியத்தைக் கைவிடவில்லை. படமும் உயர்தரமாயிருக்க வேண்டும்; பார்ப்பவர்களும் அதிகமாக வரவேண்டும் என்ற இருவகை நோக்கத்துடன் மேலும் மேலும் முயற்சிகள் செய்து வந்தார். 'வாழ்க்கை' படத்திலே ஏ.வி.மெய்யப்பச் செட்டியாரின் நோக்கம் பரிபூரணமாக நிறைவேறியுள்ளது. அவருக்கு நமது மனப்பூர்வமான வாழ்த்துக்கள்.'

'வாழ்க்கை' படத்தை 'ஜீவிதம்' என்ற தலைப்பில் தெலுங்கில் தயாரித்து அளித்தார், திரு ஏவி.எம். அப்போது மறுபடியும் 'கல்கி' அவரைப் பற்றி எழுதினார். சினிமா ஸ்டாரை அட்டைப் படமாகப் போடாமல், அந்த நட்சத்திரத்தை நடிப்பில் சோபிக்கச் செய்கிற டைரக்டரை- மெய்யப்பச் செட்டியாரை- மேலட்டையில் புகைப்படமெடுத்துப் பிரகரித்தார்.

அந்தக் கட்டுரையில் 'கல்கி' எழுதினார்:

'ஏவி.எம். அரிய குணநலன்கள் படைத்தவர்; இனிய சுபாவம் உடையவர்; உண்மை நட்பு என்னும் பண்புக்கு சிறந்த உதாரண புருஷர்.

பாரதியாரின் பாடல்கள் உரிமையை, பல்லாயிரம் ரூபாய் கொடுத்து ஏவி.எம். வாங்கியபோது, பலர் அவரைப் பார்த்துப் பரிதாபப்பட்டார்கள்! பிறகு அவர்களே, 'மேனா, அந்தப் பாடல்களால் பணத்தை வாரிக் கட்டிக்கொண்டு விடுகிறார்' என்று புகார் செய்தார்கள். பெருந்தொகை கொடுத்து விலைக்கு வாங்கிய பாரதி பாடல்கள் உரிமையை 'மேனா' எந்தவித நிபந்தனையும் இன்றி, பிரதிபலன் எதையும் எதிர்பாராமல் அரசிடம் ஒப்படைத்து, நாட்டின் பொது உடைமை ஆக்கியபோது அவர் எதிரிகளும் அவருடைய அரிய செயலைப் பாராட்ட வேண்டியதாயிற்று!

ஏவி.எம். மேலும் படத்தொழிலில் வெற்றி பெற்று, அகில இந்தியாவிலும் ஏவி.எம். புகழை நிலைநாட்டுவார் என்று நம்புகிறோம்.'

'கல்கியின் நம்பிக்கை வீண்போகவில்லை. 'பஹார்' என்ற தலைப்பில் சீக்கிரமே 'வாழ்க்கை' திரைப்படம் ஹிந்தியில் எடுக்கப்பட்டு அமோக வெற்றி பெற்றது.

படாதிபதிகள், டைரக்டர்கள் பலர் தோன்றுவார்கள், மறைவார்கள்; படங்கள் வரும், போகும்; பணம் குவியும், கரையும். ஆனால் இலட்சியங்கள் மறைவதில்லை, அந்த இலட்சியங்களைப் பாடுபட்டு அடைந்த உயர்ந்த மனிதர்களும் மறைவதில்லை. ஏவி.மெய்யப்பச் செட்டியாரும் இன்னும் பல நூற்றாண்டுகளுக்கு நிலைத்து வாழ்வார்.




**உள்ளத்தின் அழகு முகத்தில் தெரியும்;**
**இல்லத்தின் அழகு புக்ஷெல்ஃபில் புரியும்!**

**கல்கி ராஜேந்திரன்** எழுதிய

**சாருலதா ரூ. 120**

சிகரங்களை நோக்கிச் செல்லும் சாருலதாவின் வெற்றிப் பயணத்தில் எத்தனை கண்ணிவெடிகள்!

**விண்ணும் மண்ணும் ரூ. 110**




ஒற்றாடல் கலையில் சிறந்த தனஞ்செயனின் சாகசங்களிடையே எத்தனை சோகங்கள்!

இரண்டு நாவல்களையும் சேர்த்து வாங்கினால் **இலவசமாக**
ஒரு மர்ம நாவல், **கல்கி ராஜேந்திரன்** எழுதிய
**இருட்டு அரண்மனைகள்!**
மூன்றும் கூரியரில் இந்தியாவுக்குள் எங்கள் செலவில் அனுப்பப்படும். **Vanathi Pathippakam** பெயருக்கு **DD, at per cheque** அல்லது **MO** அனுப்பவும்.



**வானதி பதிப்பகம்,**
23, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை 600 017





# என் வாழ்க்கை ஒலிபெற ஒரு வேண்டுகோள்!

நாலரை வயதாகும் நான், பிறவியில் இரண்டு காதுகளும் முழுவதும் கேட்காமல் பிறந்ததால், எனக்கு பேசும் திறனும் இல்லை. நான் ஒலிகளைக் கேட்டு, பின் பேசுவதற்கு **COCHLEAR IMPLANT** என்ற அற்புதக் கருவியை என் உட்காதினுள் அறுவை சிகிச்சை செய்து பொருத்த **பத்மஸ்ரீ Dr.மோகன் காமேஸ்வரன்** அவர்கள், பரிசோதனைகள் செய்து, சம்மதித்துள்ளார். இதன் பின், நான் கல்வி பெற்று நல்வாழ்க்கை வாழ இயலும். இக்கருவி மற்றும் அறுவை சிகிச்சைக்கு **ரூ.8 லட்சம்** செலவாகும். எனது தந்தை C. பழனிச்சாமி வெகு ஏழ்மை நிலையில் உள்ளார்.

இதுவரை பல நல்ல இதயங்கள் நன்கொடை வழங்கியது போக இப்பொழுது இன்னும் **ரூ.2 லட்சம்** தேவைப்படுகிறது. நன்கொடைகளை தாங்கள்

**MADRAS ENT RESEARCH FOUNDATION,**
**CHARITABLE TRUST - A/C BABY S.P.KAVYA**

என்ற பெயரில் A/c payee cross செய்த காசோலையின் மூலம் கீழ்கண்ட முகவரிக்கு அனுப்ப வேண்டுகிறேன்.

**MADRAS ENT RESEARCH FOUNDATION,**
No.1, First Cross Street, Off. Second Main Road, Raja Annamalaipuram,
Chennai - 600 028

நன்கொடைகளுக்கு 80G பிரிவின் கீழ் வருமான வரிவிலக்கு உண்டு என்பதை பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

**S.P. காவ்யா**

Advt

“என்னங்க... நம்ம குழந்தையைப் பாருங்க! உடம்பெல்லாம் எப்படி கொதிக்குது! ஒரே வாமிட் வேற... எனக்கு ரொம்ப பயமா இருக்குங்க!”

“அதெல்லாம் ஒண்ணும் ஆகாது வினோ. பயப் படாத” என்று ரஞ்சித் ஆறுதல் கூறினாலும் அவனுக்கு ஒரு பக்கம் ‘திக்’ கென்றுதான் இருந்தது. போன வாரம்தான் இரண்டு வீடு தள்ளி ஒரு குழந்தைக்கு இதேபோல் வந்து மருத்துவ மனையில் சேர்த்தது ஞாபகத்துக்கு வர, அரண்டு போய் ஹாஸ்பிட்டலுக்கு அழைத்துச் சென்றான்.



• டாக்டர் சாய்ரமணன்

## “இதற்கு குறிப்பிட்ட மருந்தென்று எதுவும் இல்லை!”



“எத்தனை நாளா இப்படி இருக்கு?” என்றார் டாக்டர்.

“மூணு நாளா... குழந்தை ரொம்ப சோர்ந்து போயிடுச்சு... வாமிட்ல வேற ப்ளட் வந்துச்சு டாக்டர்...” என்று கண் கலங்குகிறாள் வினோ.

“என்ன இவ்ளோ கேர்லஸா இருந்தி ருக்கீங்க.... இப்பப் பாருங்க குழந்தைக்கு ரொம்ப முடியாமப் போச்சு... காய்ச் சல்னா உடனே டாக்டரைப் பார்த்தி ருக்க வேணாமா...” என்று அவர்களைக் கடிந்து கொள்கிறார் டாக்டர்.

குழந்தையின் நிலைமையை ஆராய்ந்து உடனே ஹீமோகிராம் டெஸ்ட் எடுக்கச் சொல்கிறார். பரிசோதனைக்குப் பிறகுதான் தெரிகிறது– குழந்தைக்கு வந்தி ருப்பது விஷக் காய்ச்சல் என்பது.

“தமிழகம் முழுக்கவே இப்ப விஷக் காய்ச்சல் ரொம்ப வேகமா பரவிட்டி ருக்கு. இதனால பெரிய வங்களைவிட குழந்தைங் கதான் அதிகமா பாதிக்கப் படுறாங்க” என்கிறார் சென்னை, மைலாப்பூர் ஜெயா க்ளினிக்கைச் சேர்ந்த டாக்டர் சாய் ரமணன். பொது மருத்து வத்தில் நிபுணரான சாய் ரமணன், தொடர்ந்து நம்மிடம் விஷக் காய்ச்சல் குறித்துப் பேசினார்...

“இதுக்குக் கொசுக்கள்தான் முக்கிய காரணம். எல்லா காலங்களிலும் இந்நோய் வரும்னாலும் மழைக் காலங்களில் இதன் பாதிப்பு அதிகம். கோடையிலிருந்து மெல்ல மெல்ல நாம மழைக்காலத்துக்கு மாறிட்டிருக்கோம். அங்கங்க இப்பவே மழை பெய்ய ஆரம்பிச்சுடுச்சு. இனி கொசுக்களுக்குக் கொண்டாட்டம்தான்.

மூன்று நாட்கள் தொடர்ந்து காய்ச் சல், உடல் சோர்வு, வாந்தி இருந்தாலோ,

வாந்தியில் ரத்தம் வெளிப்பட்டாலோ உடனடியா 'ஹீமோகிராம்' பரிசோதனையைச் செய்யணும். 'petichia' என்ற தோல் அலர்ஜி ஏற்பட்டு, தோலில் ரத்தக் கட்டுகள்கூட உண்டாகும். அதோடு வலிப்பு நோய் வரவும் வாய்ப்புள்ளது. அஜாக்கிரதையா விட்டுட்டா குழந்தையோட உயிருக்கே ஆபத்து ஏற்படும்.

எந்த ஏரியாவுல பார்த்தாலும் விஷக் காய்ச்சல்னு பலர் பாதிக்கப்பட்டிருக்காங்க. என் க்ளினிக்குக்கு அதிகமான பேர் விஷக் காய்ச்சலோடதான் வர்றாங்க. அன்றாட வேலையை முடக்கிப் போட்டு ரொம்ப அவஸ்தையைக் கொடுத்துடும். ஆரம்பத்துலயே கவனிச்சுட்டா பெருசா பாதிப்பில்லாம தப்பிச்சுடலாம்'' என்கிறார்.




சரி, இதற்கு என்னதான் ட்ரீட்மெண்ட்?

"இந்த விஷக் காய்ச்சலுக்கு குறிப்பிட்ட மருந்துன்னு எதுவும் இல்லை. நோயாளியின் உடலுக்குச் சரியான ஊட்டத்தைக் கொடுக்கணும். அதனால் முதலில் நோய் எதிர்ப்புச் சக்திக்கான மாத்திரை, மருந்தைக் கொடுத்து, பிறகுதான் சிகிச்சை மூலம் படிப்படியா குணப்படுத்த முடியும். இது குழந்தைகளைத்தான் அதிகமா குறி வைக்குது. அதுக்காக பெரியவங்கள விட்டுடும்னு அர்த்தம் கிடையாது. இன்னிக்கு அதிகளவுல அவங்களும் பாதிக்கப்பட்டிருக்காங்க. அதனால் மிகக் கவனமாக இருக்க வேண்டும்."

எப்படிக் கட்டுப்படுத்தலாம்?

"இந்த விஷக் காய்ச்சல் வீட்ல ஒருத்தருக்கு வந்தா, தொடர்ந்து எல்லாருக்கும் பரவ வாய்ப்பிருக்கு. அதனால முடிஞ்சவரைக்கும் ஜுரம் வந்த நபரைத் தனிமைப்படுத்தாம, அதேநேரம் எச்சரிக்கையா நடந்துக்கணும்.

பெரியவங்களுக்கு ஜுரம் வர்ற பட்சத்துல வீட்ல குழந்தை இருந்தா, இன்னும் கவனம் வேணும்; குழந்தைய பாதுகாக்கணும். பெரும்பாலும் இந்த விஷக் காய்ச்சலுக்குக் கொசுதான் மூல காரணமா இருக்குறதால மாலை நேரமானதும் வீட்டுக் கதவுகளையும், ஜன்னல்களையும் மூடி வைக்கலாம். குழந்தைகளுக்கு அணிவிக்கும் ஆடை, உடலை முழுவதும் மூடும் வகையில் இருக்கணும். கொசு விரட்டிகளைப் பயன்படுத்தலாம். வீட்டையும், சுற்றுப்புறத்தையும் சுத்தமா வச்சுக்கணும். குடிநீரைக் காய்ச்சிக் குடிப்பது, தண்ணீர் தேங்காமல் பார்த்துக்கறதால கட்டுப்படுத்தலாம். மாநகராட்சியும் மக்கள் வசிப்பிடங்களில் கொசு மருந்தைத் தூவி கொசுக்கள் அதிகமாகாமல் தடுக்கறதன் மூலமா விஷக்காய்ச்சலை விரட்ட முடியும்'' என்கிறார் டாக்டர் சாய்ரமணன்.

- மனோஜ் மனோ

படம் : பொள்ளாச்சி சுந்தரம்



# கல்கி



2006 ஆகஸ்ட் 6
விய ஆடி 21
மலர் : 65
இதழ் : 1

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

## சமுதாய நல(?) பட்ஜெட்!

தமிழக பட்ஜெட்டில் பற்றாக்குறை 2.93 சதவிகிதம் என்பது பாராட்டுக்குரிய விஷயம். இதே முன்னேற்றம் தொடர்ந்து, இன்னும் இரண்டாண்டுகளில் பற்றாக்குறையே இல்லாத நிலை உருவாக வேண்டும் என்று விரும்புகிறோம்.

ஆனால், இந்த நற்செய்திக்கு இன்றைய தி.மு.க. அரசு முற்றிலும் பொறுப்பாகி பாராட்டுபெற முடியாது. முந்தைய ஆட்சிப் பொறுப்பில் இருந்த ஜெயலலிதா, தாம் முதல்வரானதுமே ஏகப்பட்ட வரிகளை விதித்து, அரசு வருவாயைக் கூட்டும் முயற்சியில் இறங்கினார். இதனால் மக்கள் திணறிப் போனாலும் அரசின் நிதி நிலைமை சீரடைந்தது. அந்தப் பயனைத்தான் இன்றைய தி.மு.க. அரசு அனுபவிக்கிறது.

நடப்பு ஆண்டின் வருவாய் இலக்குகளை எட்டி, பட்ஜெட்டை தி.மு.க. எப்படி நிறைவேற்றப் போகிறது என்பதுதான் கேள்வி. இவ்வாண்டு நிதி நிலைமை சீராக இருப்பதால் புதிய வரிகள் எதுவும் விதிக்கப்படவில்லை. பருப்பு வகைகள் மீதான விற்பனை வரி மற்றும் வேறு சில வரிகள் நீக்கப்பட்டும் உள்ளன.

சமுதாய நலத் திட்டங்களுக்கான நிதி ஒதுக்கீடு மொத்த செலவில் 35 சதவிகிதம் என்கிற அளவுக்கு அதிகரித்துள்ளது! கடந்த ஆண்டு ரூபாய் 11,942.49 கோடி நலத்திட்டங்களுக் கென செலவிடப்பட்டிருக்க, இவ்வாண்டு அது வரலாறு காணாத வகையில் ரூ.13,983 கோடியாக உயர்த்தப்பட்டுள்ளது. அதாவது, ஒரே ஆண்டில் இரண்டாயிரம் கோடிக்கும் மேலாக கூடுதல் ஒதுக்கீடு!

நலத்திட்டங்களை அரசு செயல்படுத்த வேண்டும் என்பதில் சந்தேகமேயில்லை. அதிலும் கல்வி, சுகாதாரம் ஆகியவற்றுக்






கான ஒதுக்கீடுகள் அதிகரிப்பது மிக நியாயமே. ஆனால் பிற ஒதுக்கீடுகள் ஒரு வரையறைக்குட்பட்டு இருப்பதுதான் நல்லது என்பதுடன், தனி நபர் வருமானமும் மாநில பொருளாதாரமும் பெருகப் பெருக, இந்த ஒதுக்கீடுகள் குறைந்துவர வேண்டும். ஆனால், அவ்வாறு நடப்பதேயில்லை.

இரண்டாயிரம் கோடி ரூபாயை சமுதாய நலத் திட்டங்களில் கூடுதலாகச் செல விடும்போது, அது தொழிற்பெருக்கத்துக்கோ, வேலைவாய்ப்புப் பெருக்கத்துக்கோ, உற்பத்திப் பெருக்கத்துக்கோ, வருவாய்ப் பெருக்கத்துக்கோ வகை செய்யாது! அவ்வளவு பெரிய தொகை பலவாறாகப் பங்கு பிரிக்கப்பட்டு, பல்வேறு திட்டங்களுக்குப் பகிர்ந்தளிக்கப்படும். ஆனால், இறுதிப் பயனீட்டாளரைச் சென்றடையும் தொகை, பட்ஜெட் ஒதுக்கீடைக் காட்டிலும் மிகக் குறைவாகவே இருக்கும். போதாக்குறைக்கு, தேர்தல் வாக்குறுதியாக அள்ளித் தந்த சலுகைகளும் இலவசங்களும் ஏராளமான செலவுக்கு வழிவகுக்கும். நலத்திட்டங்களுக்கான நிர்வாகச் செலவும் கணிசமாக இருக்கும் என்பதோடு நலத்திட்டங்களைச் செயல்படுத்துவதில் நிலவும் லஞ்ச - ஊழல் கலாசாரம் ஏராளமான தொகையைக் காவு கொள்ளும்! இவ்வாறு நிகழாமல் தடுப்பதிலும் மேற்பார்வை செய்வதிலும் இன்றைய அரசு வெற்றி காணுமென்றால், அது உலகமகா அதிசயமாகவே இருக்கும்.

பயனற்ற செலவுகளைக் குறைத்து, வேலைவாய்ப்புகளைப் பெருக்கி, மக்களுடைய வருமானத்துக்கு வழிசெய்யும் முகமாக இந்த பட்ஜெட்டில் என்ன செய்யப்பட்டிருக்கிறது என்று ஆராய்ந்து பார்த்தால், பிரமாதமாக ஏதுமில்லை. இதைச் செய்யாதவரையில் தமிழகத்தில் உற்பத்தி பெருகாது; விலைவாசி குறையாது. விலைவாசி அதிகமா யிருக்கிறது என்பதற்காக அரசு மீண்டும் ஏழை - எளியவர்களுக்கான சமுதாய நலத்திட்ட ஒதுக்கீடுகளைத்தான் அதிகரிக்க வேண்டிவரும். இந்த விஷ வட்டத்திலிருந்து விடுபட துணிவும் தீர்க்கதரிசனமும் தேவை. அடுத்த பட்ஜெட் தயாரிக்கும்போதாவது தி.மு.க. அரசும் நிதி அமைச்சரும் அவற்றைக் கைகொள்ளட்டும். சமுதாய நலன் என்பது ஏழைகளை ஏழைகளாகவே நீடிக்கச் செய்வதல்ல; அவர்களை உழைப்பாளிகளாகவும் அதன்மூலம் தன்னிறைவு பெற்றவர்களாகவும் மாற்றுவதுதான் உண்மையான சமுதாய நலன். ●

**'துள்ளாத மனமும் துள்ளும்' வெற்றிப் படத்திற்குப் பிறகு, பூவெல்லாம் உன் வாசம், பெண்ணின் மனதைத் தொட்டு, ராஜா ஆகிய படங்கள் பெரிய அளவில் பேசப்படாததால், ஓர் இடைவெளிக்குப் பிறகு லிங்குசாமியின் தயாரிப்பில் இயக்குநர் எழில் களமிறங்கியிருக்கும் படம் தீபாவளி. ஜெயம் ரவி, பாவனா நடிக்கும் இப்படத்தின் ஷூட்டிங் போய்க்கொண்டிருக்க, எழிலிடம் பேசினோம்.**



• எழில்

'அதென்ன தீபாவளி? தீபாவளிக்கு ரிலீஸ் ஆகிறதாலயா?' என்றால், சிரித்துக்கொண்டே "அப்படியெல்லாம் இல்லீங்க. தீபாவளின்னா சந்தோஷம்னு அர்த்தம். இந்தப் படத்தைப் பார்த்துட்டு வரும்போது அது இருக்கும்" என்கிறார்.

'இதுவும் வழக்கம்போல் லவ் சப்ஜெக்ட்தானா?'

"ஆக்ஷன் கலந்த மென்மையான காதல் படம்னு சொல்லலாம். ராயபுரம் பகுதியில நடக்கிற உண்மையான கஷ்டங்களை அடிப்படையாகக் கொண்ட கதை. இந்தப் பகுதியிலதான் அதிகமான குற்றங்கள் நடக்குது. அங்க திருந்தி வாழ நினைக்கும் குற்றவாளிகள் சமூகத்தால் திருந்த முடியாது. இதுதான் படத்தோட மையம். கதாநாயகன் பில்லு. அவன் பெரிய ரவுடியோ, தாதாவோ இல்ல. திருந்தி வாழ நினைக்கிற குற்றவாளிகளுக்குத் தன்னுடைய சொந்த நிறுவனத்தில் வேலை கொடுத்து வாழ வைக்கிறவன். பாவனாவுக்கும், ஜெயம் ரவிக்கும் ஏற்படுற அழகான மென்மையான காதல்... இதெல்லாம் கலந்ததுதான் தீபாவளி."

'ஏன் எப்பவும் காதல் படமாவே எடுக்கறீங்க? சமூகத்துக்கு மெசேஜ் சொல்ற படம் எடுத்தா ஓடாதுன்னு பயப்படுறீங்களா?'

"அழகான காதல் படங்கள் எடுக்கிறது எனக்கு ரொம்பப் பிடிக்கும். முதலில் என்னைக் காதல் படங்கள் எடுக்கிறதுல தகுதிப்படுத்திக்கிறேன். ஏன்னா நான் இன்னும் மெச்சூரிட்டி ஆகல. அதற்கான தேடலில் தான் இருக்கேன். இதில் ஒரு வெற்றியை அடைஞ்சுட்டு, சமூகத்துக்குக் கருத்து சொல்ற மாதிரியான கதைகளை எடுப்பேன்" என்றவரிடம் 'துள்ளாத மனமும் துள்ளும் படத்துக்குப் பிறகு நீங்கள் எடுத்த படங்கள் பெரிய அளவில் பேசப்படவில்லையே..' என்றோம்.

"அதுக்குக் காரணம் துள்ளாத மனமும் துள்ளும் படம்தான். 'பெண்ணின் மனதைத் தொட்டு' படம் 100 நாட்கள் ஓடி தயாரிப்பாளர்கள் இலாபம் கண்ட படம். 'ராஜா' 75 நாட்கள் ஓடிய படம். 'பூவெல்லாம் உன் வாசம்' படத்தைப் பார்த்துட்டுப் பாராட்டாதவங்களே இல்லை. ஆனா எல்லாரும் அந்தப் படத்தைத் திருட்டு விசிடியில பார்த்துட்டு, தியேட்டருக்கு வராததாலதான் வசூல்ரீதியா ஜெயிக்க முடியல. அப்படியிருந்தும் பெரிய அளவுக்குப் பேசப்படலேன்னா முதல் படத்தையே மெகா சூப்பர் ஹிட் படமா கொடுத்ததுதான். துள்ளாத மனமும் துள்ளும் படத்தைக்

இந்தப் படம்தான்
உங்களுக்குக்
கைகொடுக்கணும். ஆனா
அதுக்கு முன்னே எனக்கு
நீங்க கைகொடுத்துட்டீங்க.
ரொம்ப தேங்க்ஸ்!

# "தீபாவளின்னா சந்தோஷம்னு அர்த்தம்!"



# வேதத்துக்கு ஸ்காலர்ஷிப்!

ஸாம வேதம் பயில, பாடசாலையில் சேர விரும்பும் ஏழை மாணவர்களுக்கு, திருக்கோடிகாவல் ஸ்ரீனிவாஸ வைத்தியனாதன் சாரிடபிள் டிரஸ்ட், ஸ்காலர்ஷிப் அளிக்க முன்வந்துள்ளது.

முதன் முதலாகப் பாடசாலையில் சேரும் மாணவர்கள் மட்டுமே இதனைப் பெற முடியும். இதில் பயன் பெற விரும்புவோர், முழு விவரங்களுடன் கூடிய விண்ணப்பத்தை (மாணவர் பெயர், வயது, முகவரி, சேரவிருக்கும் பாடசாலை முதலிய விவரங்களுடன்) கீழ்க்காணும் விலாசத்திற்கு அனுப்பவும்.

**டி.எஸ்.வைத்தியனாதன்,**
டிரஸ்ட் ஸ்தாபகர்,
**டி.எஸ்.குஞ்சிதபாதம்,**
மேனேஜிங் ட்ரஸ்டி
எண்.12 (ப. எண்.15), ஐயப்பா நகர்,
துரைசாமி கார்டன்,
நங்கநல்லூர், சென்னை - 600 061.
போன் : 22347807

கடைசியா எடுத்திருந்தா என் நிலை வேற மாதிரி இருந்திருக்கும்.''

'சமீபமா ஜெயம் ரவியின் படங்கள் எல்லாமே ஃப்ளாப். உங்களுக்கும் இந்தப் படம் தான் உயிர் கொடுக்கப் போகுற படம். அப்படியிருக்கும்போது ரவியை ஹீரோவாக செலக்ட் பண்ண எப்படி தைரியம் வந்தது?' என்றால் கணீரென்று வருகிறது பதில்.



• லிங்குசாமி

"எனக்கு என்னோட கதை மேல ரொம்ப நம்பிக்கை இருக்கு. ஒரு படம் நல்லா ஓடணும்னா கதை நல்லா இருந்தாலே போதும். ரெண்டு வருஷத்துக்கு முன்னால இந்தக் கதையைத் தயார் பண்ணும் போதே அந்தப் படத்துக்கு ஜெயம் ரவிதான் ஹீரோன்னு முடிவு பண்ணிட்டேன். ஜெயம் ரவியும் 'இந்தக் கதை எனக்கு ரொம்பப் புடிச்சிருக்கு'ன்னு சந்தோஷப்பட்டார்.''

'லிங்குசாமி உங்களுக்கு வாய்ப்பு கொடுத்தது கதைக்காகவா அல்லது உங்கள் மீதுள்ள நட்புக்காகவா?'

''கலைத் துறையில் சொந்தம், பந்தம், நட்பு எதுவுமே கிடையாது. என்னுடைய கதையைப் பார்த்து, அது பிடித்துப் போய்தான் 'நானே தயாரிப்பாளராகிறேன்' என்று ஒப்புக் கொண்டார். அவர் எனது நண்பர் என்பது எனக்குக் கிடைத்த கூடுதல் சிறப்பு.''

'லிங்குசாமியும் ஒரு சிறந்த இயக்குனர் என்கிற போது உங்கள் கதையில் அவருடைய தலையீடு இல்லாமலா இருக்கும்!'

''அவருடைய தயாரிப்பில் படம் கிடைத்தது எனக்கு சந்தோஷமா இருக்கு. அவர் எனது நண்பர் என்கிற முறையில் பேசுவாரே தவிர, கண்டிப்பாக அவருடைய தலையீடு படத்தில் துளிகூட இருக்காது. ஷூட்டிங் ஸ்பாட்டில் வந்து கைகொடுத்துப் பேசிவிட்டுச் சென்று விடுவார். அவருக்கு இதைப் பற்றிப் பேச நேரமில்லை. அவர் 'பீமா'வில் பிஸியாக இருக்கிறார்.''

**- மனோன்மனோ**

படங்கள் : **பொள்ளாச்சி சுந்தரம்**

## றந்த நூல்களைப் படிக்கப் படிக்க மனிதன் ஆனந்தம் அடைகிறான்

ஸ். வி.வி.

1. கோபாலன் ஐ.ஸி.எஸ். 55-00
2. ரமணியின் தாயார் 40-00
3. ஹாஸ்யக் கதைகள் 40-00
4. செல்லாத ரூபாய் 32-00
5. சம்பத்து 63-00
6. வசந்தன் 40-00
7. புது மாட்டுப் பெண் 21-00
8. சபாஷ்! பார்வதி! 25-00
9. வாழ்க்கையே வாழ்க்கை 45-00
0. சௌந்தரம்மாள் 65-00
1. உல்லாச வேளை 65-00
2. The Marriage 12-00
3. At a Dinner 16-00

ஸ்.வி.கே.

4. பலே! பலே! கதைகள் 90-00
5. சபாஷ்! கதைகள் 90-00
6. பேஷ்! பேஷ்! கதைகள் 90-00

நவன்

1. துப்பறியும் சாம்பு(இரண்டு பாகம்) 155-00
2. மிஸ்டர் வேதாந்தம்(இரண்டு பாகம்) 170-00
3. ஐந்து நாடுகளில் அறுபது நாள் (மூன்று பாகம்) 260-00
4. ராஜத்தின் மனோரதம் 50-00
5. மிஸ் ஜானகி 75-00
6. சீனுப்பயல் 55-00
7. விச்சுவுக்குக் கடிதங்கள் 42-00
8. ராஜியின் பிள்ளை 45-00
9. ஏன் இந்த அசட்டுத் தனம் 55-00
0. போக்கிரி மாமா 65-00
1. அப்பளக் கச்சேரி 50-00

மரினா

1. சாந்தி எங்கே? 40-00
2. கால் கட்டு 36-00
3. சாமியாரின் மாமியார் 35-00
4. மாப்பிள்ளை முறுக்கு 50-00
5. அடாவடி அம்மாக்கண்ணு 28-00
6. எங்கம்மா 55-00
7. அப்பா ஒரு அப்பாவி 28-00
8. நேர்மை 60-00
9. நாடகம் போட்டுப் பார் 30-00
0. ஊர் வம்பு 28-00
1. கல்யாண மார்க்கெட் 30-00
2. வடபழனியில் வால்மீகி 30-00
3. மாமியார் மெச்சிய மாப்பிள்ளை 32-00
4. சீதா கல்யாணம் 28-00

**ராஜீவ் காந்தி கொலை**
விடை கிடைக்காத வினாக்களும்
கேட்கப்படாத கேள்விகளும்
டாக்டர் சுப்ரமண்ய சுவாமி
ரூ. 125-00

ப.ரா. எழுத்துக்கள்- (8 தொகுதிகள்)
ரூ. 700-00

சோ

1. கூவம் நதிக்கரையினிலே (பாகம்-2,3) 72-00
2. எங்கே பிராமணன் 100-00
3. துக்ளக் படமெடுக்கிறார் 30-00
4. காமராஜை சந்தித்தேன் 33-00
5. முகமது பின் துக்ளக் 28-00
6. யாருக்கும் வெட்கமில்லை 35-00
7. இந்தியா எங்கே போகிறது? 12-00
8. துக்ளக் கேள்வி - பதில் பாகம்-2 45-00
9. சாதல் இல்லையேல் காதல் 41-00
10. உண்மையே உன் விலை என்ன 42-00
11. உறவுகள் இல்லையடி பாப்பா 20-00
12. சம்பவாமி யுகே யுகே 30-00
13. வெறுக்கத்தக்கதா பிராமணீயம்? 30-00

கலைமாமணி எம்.எஸ். உமர் எழுதிய
**கலை உலக சக்கரவர்த்திகள்**
எம்.கே.டி. தியாகராஜபாகவதர், என்.எஸ். கிருஷ்ணன், ராஜரத்தினம் பிள்ளை, ஸி.எஸ். ஜெயராமன், தண்டபாணி தேசிகர், ஜி.என்.பி., பாபநாசம் சிவன், எஸ்.டி. சுப்புலட்சுமி டி.பி. ராஜலட்சுமி, என்.ஸி. வசந்த கோகிலம், பயாஸ்கோப் வளர்ந்த கதைகள் ரூ. 200-00

நூற்றாண்டு வெளியீடுகள்

1. நம்மவர் செய்த விந்தைகள் 100-00
2. உலக மகா கொடுங்கோலர்கள் 100-00
3. உலகப் புகழ் பெற்ற சொற்பொழிவுகள் 100-00
4. அரண்மனை ரகசியங்கள் 100-00
5. உலகப் புகழ் பெற்ற கட்டடங்கள் 100-00
6. நம்ப முடியாத உண்மைகள் 100-00
7. வியப்பூட்டும் உண்மைகள் 100-00
8. விந்தைத் தாவரங்களும், மூலிகைத் தாவரங்களும் 100-00
9. யார் என்ன சொன்னார்கள் 100-00
10. நீருலகிலே! 100-00
11. பாலூட்டிகள் வரிசையிலே! 100-00
12. தமிழ் வளர்த்த பெருமக்கள் 100-00

பி.எஸ். ராமையா

1. மல்லியம் மங்களம் 40-00
2. பிரசிடெண்ட் பஞ்சாட்சரம் 40-00
3. பாஞ்சாலி சபதம் 25-00
4. பதச் சோறு 56-00
5. பூவிலங்கு 52-00
6. நந்தா விளக்கு 80-00
7. மலரும் மணமும் 70-00
8. பாக்கியத்தின் பாக்கியம் 33-00
9. புதுமைக் கோயில் 33-00

* தமிழில் வெளிவந்த முதல் சிறுகதைத் தொகுப்பு
* ராஜாஜி, சாவர்க்கரின் முன்னுரையுடன்

மகரிஷி வ.வே.சு. ஐயர் எழுதிய
**மங்கையர்கரசியின் காதல்** ரூ. 37-00



(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)
244, ராமகிருஷ்ணா மடம் சாலை,
தபால் பெட்டி எண்: 617, மயிலாப்பூர்,
சென்னை – 600 004, தொலைபேசி: 2464 1314
e-mail : srinivasan@alliancebook.com
visit us at : www.alliancebook.com



புதிய தொடர்

# பட்டுக்கோட்டை

## 1. பொருத்தம்

**வி**டிந்து கொண்டிருந்தது. கீழ் வானத்து மேகத் திப்பிகள் யாவும் லிப்ஸ்டிக் போட்டிருந்தன. குறுக்கே பறந்த குருவிகள் கோஷ்டி கானம் பாடிக் கடந்தன. வயல்வெளிகளில் பயிர்கள் இளங்காற்றில் அசைந்து பறவைப் பார்வையில் அலையடித்துக் கொண்டிருந்தன.

மயில்பட்டியில் டவுன் பஸ் வேகம் குறைந்ததும் கண்டக்டர் செய்தித்தாள் கட்டை வெளியே வீசி விட்டுப் போனான். பெட்டிக் கடை ரங்கசாமி பீடியைப் பற்ற வைக்கப் போனவன், காதில் செருகிக்கொண்டு வந்து எடுத்துக் கொண்டான்.

பக்கத்து டீக்கடையில் பாலு ஊதுவத்தி கொளுத்திக். கடை பூராவும் காட்டிக் கொண்டிருக்க, வாசலில் மாடு நிறுத்தி பால் கறந்து கொண்டிருந்த அய்யாவுக்குக் கொட்டாவி வந்தது. தேகம் மெலிந்த பசு வால் சுழற்றி ஈ விரட்டிக் கொண்டது. கடையை ஒட்டிய நீளமான குட்டிச் சுவரில் வண்ணம் தேய்ந்த கட்சிச் சின்னங்களில் இன்னும் தேர்தல் வாசனை இருந்தது. அருகில் குளத்தில் தாமரை இலைகள் இடைவெளி இல்லாமல் இலைச் சங்கிலி அமைத்திருந்த தால் தண்ணீரால் வெளியே தலைகாட்ட முடியவில்லை.

பின் சக்கரத்தைச் சற்றே



# ம்!

தூக்கிப் பிடித்தபடி சைக்கிளைத் தள்ளிக் கொண்டு வந்து நிறுத்திய சிவா, "டிக்காஷன் எறக்கிட்டியா பாலு? ஒரு டீ போடு" என்றான்.

''போடறேண்ணே. என்னாச்சு? பஞ்சரா?''

"ஆமாடா.. சவரிமுத்து வீட்ல எழவப்போ நான் ஊர்ல இல்ல. அதான் துக்கம் விசாரிச்சுட்டு வரலாம்னு பொறப்பட்டேன். முன்னு ஏறிடிச்சி. இங்கயே விட்டுட்டுப் போறேன். கணேசன் வந்தான்னா பஞ்சர் ஒட்டிட்டு வரச் சொல்றியா?'' வேட்டியை மடக்கிக் கட்டிக்கொண்டு ஆடும் ஒரு காலுக்குச் செங்கல் வைக்கப்பட்டிருந்த மர பெஞ்சில் மெதுவாக அமர்ந்தான்.

"ஆவட்டும்ணே. கெழவி கொடுத்து வச்சவண்ணே. பல்லக்கு ஜோடனை என்ன... பட்டாசு அமர்க்களம் என்ன... ஒரு வண்டி மாலைண்ணே... படங்கூட பிடிச்சாங்க..''

"படமா?''

முழங்காலில் கையூன்றி பால் குவளையுடன் எழுந்த அய்யாவு, ''வீடியோ எடுத்ததைச் சொல்றான். கெழவியோட கடைசி பேரன் சவுதில இருக்கான்ல, அவந்தான் 'எடுத்து அனுப்புங்க, அங்கோர்ந்தே பார்த்துக்கறேன்'ன்னு போன்ல சொன்னானாம்'' என்றபடி கடைக்குள் சென்று அலுமினியப் பாத்திரத்தில் ஊற்றினான்.

''ஓகோ'' என்று பாலு நீட்டிய கிளாசை வாங்கிக் கொண்டு, கட்டைப் பிரித்து செய்தித் தாள்களை அடுக்கிக் கொண்டிருந்த ரங்கசாமியிடம், "பேப்பர்ல என்னடா சேதி?'' என்றான் சிவா.

கொண்டு வந்து பவ்யமாக நீட்டி, ''நீங்கதான் படிச்சி எனக்குச் சொல்லணும். ஏரோப்ளான் போட்ருக்கான். புதுசா விடறானுங்களா?'' என்றான் ரங்கசாமி.

சிவா அவசரமாகப் படித்துவிட்டு, "இல்லப்பா. பறந்துட்டிருந்தப்ப திடீர்னு எரிஞ்சி விழுந்திருக்கு. நூத்தி நாப்பது பேரு செத்திருக்காங்க. என்ன கொடுமை பாரு!''

''என்னய்யா இது... பஸ்சுல போனாலும் சாவறான். ரயில்ல போனாலும் சாவறான். ப்ளேன்ல போனாலும் சாவறான். நிம்மதியா எதுலதான் போறது?'' என்ற அய்யாவு, சிவா மேற்கொண்டு வேறு செய்தி எதுவும் படிக்காமல் ரங்கசாமியிடம் திருப்பிக் கொடுப்பதைப் பார்த்து, "ஏம்ப்பா ஒரு மாதிரி ஆயிட்டே?'' என்றான்.

''என் தங்கச்சி இல்ல, அது ஏரோப்ளேன்ல பாக்கற வேலைக்குத்தான் எழுதிப் போடப் போறேன்னு சொன்னிச்சு. அதான் சேதி படிச்சதும் ஒரு மாதிரி ஆயிடுச்சு."

''கொண்டை போட்டுக்கிட்டு, உதட்டுல சாயம் அப்பிச்கிட்டு, எல்லாருக்கும் மூட்டாயி கொடுக்கற வேலை தானே, அதெல்லாம் வேணாம்ப்பா. தாயில்லாப் பொண்ணு. ஒரே தங்கச்சி. அது சம்பாரிச்சிட்டு வந்து தான் உன் பத்தாயம்

ிரபாகர்



• படம் : ஸ்ரீஹரி

"மன்னா! அரசவையை ஏன் கூட்டமாட்டேங்கறீங்க?"
"தெரியாதா... எனக்கு 'டஸ்ட்' அலர்ஜி அமைச்சரே!"
- லீலாஜி

நெறயணும்ங்கற நெலமையில நீ இல்லயே. நல்ல எடமாப் பாத்துக் கட்டிக் குடுக்கப் பாக்கறியா, அத விட்டுட்டு எதுக்கு வேலைக்கு அனுப்பிக்கிட்டு...?"

"இதைத்தான் நானும் சொல்றேன். அவ கேட்டாத்தானே? டவுனுக்கு அனுப்பி ஆஸ்டல்ல தங்கவெச்சி டிகிரி படிக்க வெச்சது தப்பாப் போச்சி. வேலைக்கிப் போறதுதான் சுதந்திரமாம். சொந்தக் கால்ல நிக்கணுமாம். நம்மளால ஈடு கொடுத்துப் பேச முடியல."

"அது சரி. இத்துனூண்டு கொழந்தைகிட்ட இன்னைக்கி வாய் குடுக்க முடியுதா? காலேஜிக்குப் போயி படிச்சிட்டு வந்திருக்கற பொண்ணுகிட்ட எப்படிப் பேசி ஜெயிக்க முடியும்?" என்றான் பாலு, குடித்து முடித்த டீ கிளாசைக் கையில் வாங்கிக்கொண்டு.

"ஆனா என் பொண்டாட்டி கண்டிஷனா சொல்லிட்டா. ஜாதகம் எடுத்து நாலெடத்துல குடுத்துடறோம். நீ வேலைக்கும் முயற்சி பண்ணு. எது மொதல்ல அமைஞ்சாலும் ஏத்துக் கோன்னுட்டா. ஆனா இந்த ஏரோப்ளேன் வேலை மட்டும் வேணாம்னு சொல்லிடணும்" என்று எழுந்து கொண்டான். சைக்கிளைப் பூட்டி சாவியை பாலுவிடம் கொடுத்து விட்டு நடந்தான்.

வெளிச்சம் ஏறிக்கொண்டிருக்க, சாலையோரத்தில் குவிந்திருந்த குப்பையோடு உறங்கிக் கொண்டிருந்த தொத்தல் நாய் உடல் சிலிர்த்து ஓடியதில் ஈக்கள் சிதறிவிட்டு மீண்டும் அமர்ந்தன.

காய்கறிச் சந்தையில் மினி லாரியிலிருந்து உருளை, வெங்காய மூட்டைகளை இறக்கிக் கொண்டிருந்தார்கள். நான்கு கட்சிகளின் கொடிக் கம்பங்கள் உயரப் போட்டியில் இருந்தன. அம்பேத்கார் தலையில் ஒரு காக்கா, அதுவும் ஒரு சிலை போல அசையாமல் அமர்ந்திருந்தது.

"சிவா தம்பி, சோளம் எளசாருக்கு. தங்கச்சிக்குப் பிடிக்கும்பியே, வாங்கிட்டுப் போறியா?" குரல் கொடுத்த பாட்டி, சாக்கு மூட்டையில், இருந்து டயர் வண்டியில் கோபுரமாக அடுக்கிக் கொண்டிருந்தாள்.

"ஒரு டஜன் கவர்ல போட்டு வையி பாட்டி. திரும்பறப்ப வாங்கிக்கறேன்" பதில் சொல்லியபடி கடந்து நடந்தான் சிவா.

பாண்டிச்சேரியின் முதுகுத்தண்டான நேரு வீதியில் மாலையைத் தின்று கொண்டிருந்த முன்னிரவில் விரையும் வாகனங்களுக்கு நடுவில் மக்கள் நடப்பதற்கும், சாலையைக் கடப்பதற்கும் சிரமப்பட்டார்கள்.

சிறைச்சாலை தாண்டி முகம் முழுக்க கண்ணாடி போர்த்தியிருந்த தங்கத் தோட்டம் நகை மாளிகைக்கு, விரலுக்குப் பெருமை கூட்டும் வைர மோதிரம் போல வரிவரியாய்த் தொங்கிய நீல நிறச் சர விளக்குகள் மெருகூட்டின. உள்ளே நுழைபவர்களைக் காற்றுத் திரை குளிர் தூவி ஆசிர்வதித்துக் கொண்டிருந்தது. பணியாளர்களில் ஆண்கள் இலேசான நீலத்தில் முழுக்கைச் சட்டையும், அடர்த்தியான நீலத்தில் பேண்ட்டும் போட்டிருக்க, பெண்கள் அதே நிறத்தில் புடைவை அணிந்திருந்தார்கள். எல்லோரும் புகைப்படம் கொண்ட அடையாள அட்டைகளை கழுத்தில் தொங்கவிட்டிருக்க, பணம் வாங்கும் பகுதியில் குட்டி இயந்திரங்கள் விர்ரென்று பணத்தை எண்ணிக் கொண்டிருந்தன. வெளிச்ச வெள்ளம். திசையெல்லாம் தங்க மின்னல். மேல் மாடிக்கு சதா போய்க்கொண்டேயிருக்கும் நகரும் படிகள். எங்கும் தகதக தங்க வேட்டையாடிக் கொண்டிருந்தார்கள்.

கடைக்குள்ளேயே இருந்த விசாலமான தனியறையில் ஓவல் வடிவ கிரானைட் மேஜைக்கு அந்தப் பக்கம் தலையைத் தாண்டிய உயர முதுகு கொண்ட சுழல் நாற்காலியில் அமர்ந்திருந்த தங்கத் தோட்டத்தின் அதிபர் பரமேஸ்வர், உயர்ந்த ரக கதரில் ஜிப்பா அணிந்து, நடு நெற்றியில் குங்குமம் வைத்திருந்தார்.

காதில் உரசாமல் கால் இஞ்ச் தள்ளிப் பிடித்து செல்போனில் பேசிக் கொண்டிருந்தார்.

"இல்லைங்க தனசேகரன், எப்ப ஒருமித்த கருத்து இல்லையோ, இனிமே எனக்கு அங்க வேலை இல்லை. தயவு செஞ்சு சொல்றேன், வற்புறுத்தாதீங்க. நான் விலகினது விலகினதாவே இருக்கட்டும். குடுத்த கடிதத்தைத் திருப்பி வாங்கறதா இல்லைங்க. சங்கத்துக்கு யாரு புதுசா தலைவரா வந்தாலும் என்னோட ஒத்துழைப்பு என்னைக்கும் இருக்கும்னு கமிட்டி மெம்பர்ஸ் எல்லார்கிட்டேயும் சொல்லிடுங்க. கூப்புட்டதுக்கு ரொம்ப நன்றிங்க. வைக்கிறேங்க."

போனை வைத்துவிட்டு நிமிர்த்திப் பிடித்த சிலேட்டுபோல ஒல்லியாக இருந்த கம்ப்யூட்டர் திரையில் கணக்கு பார்க்கத் துவங்கினார். அருகில் மற்றொரு திரையில் தங்கத் தோட்டத்தின் அத்தனை பகுதிகளின் காட்சிகளும் மாறிமாறி தெரிந்து கொண்டிருந்தன. அவற்றில் கடையின் வாசல் பகுதியின் காட்சியை மட்டும் தேர்வு செய்து உன்னிப்பாகப் பார்த்தவர் இண்டர்காம் போனை எடுத்தார்.

"வெள்ளியங்கிரி வர்றார். இல்லைன்னு திருப்பி அனுப்பிடாதே. உள்ளே அனுப்பி வையி. அஞ்சு நிமிஷம் கழிச்சு ரெண்டு பாதாம்பால் குடுத்தனுப்பு."

வெள்ளியங்கிரி கதவெல்லாம் தட்டாமல் உள்ளே வந்து, "நாலு நாளைக்கு முன்னாடி வந்தேன். நீ இல்லைன்னுட்டானுங்க. ஆனா வாசல்ல உன் பென்ஸ் நின்னது. சரி, என்ன பிரச்னையோன்னு போய்ட்டேன்" என்றபடி கூலரிலிருந்து தண்ணீர் குடித்துவிட்டு வந்து எதிரில் அமர்ந்தார். கண்ணாடியைக் கழற்றி கர்சீப்பால் துடைத்தார்.

"இன்கம் டாக்ஸ் கணக்கு பாத்துக்கிட்டிருந்தேன். தொந்தரவு குடுக்காதீங்கன்னு சொல்லியிருந்தேன். உங்கிட்டயே நான் இல்லைன்னு சொல்லிட்டாங்க. கேள்விப்பட்டுச் சத்தம் போட்டேன். நீ எதுவும் தப்பா எடுத்துக்காதே வெள்ளி."

"ஆமாம், என்னைக்கு நான் உன்னைத் தப்பா நினைச்சிருக்கேன்? இன்னிக்கு நேத்தாப் பழக்கம், சொல்லு. எனக்குத் தெரிஞ்சு வசதி, வாய்ப்பு வந்தப்புறம் கொஞ்சம்கூட மாறாம இருக்கறவன் நீதான் பரமேஸ். ஒரு நல்ல விஷயமா வந்திருக்கேன்ப்பா."

"என்ன சொல்லு" என்று கம்ப்யூட்டரை அணைத்துவிட்டு, கைகளைக் கட்டிக்கொண்டார் பரமேஸ்வர்.

"குமரனுக்குப் பொருந்தற ஜாதகம் கேட்டிருந்தியே, நேத்து என் மேரேஜ் பீரோல பதிவான ஜாதகம் ஒண்ணு ரொம்ப அமர்க்களமாப் பொருந்தியிருக்கு. போட்டோவும் குடுத்துருக்காங்க. அம்சமா இருக்கு பொண்ணு. ஆனா ஒரு விஷயம்தான் இடிக்குது.'

"என்ன?"

"குடும்பப் பின்னணிதான். ஊரு திண்டிவனத்துக்குப் பக்கத்துல மயில் பட்டின்னு ஒரு கிராமம். பொண்ணுக்கு அம்மா, அப்பா இல்லை. ஒரே ஒரு அண்ணன். அவன்தான் வளர்த்து, படிக்க வெச்சிருக்கான். பொண்ணு பி.காம் முடிச்சிட்டு இப்ப கம்ப்யூட்டர் கிளாஸ் போவுது. சொந்த வீடு இருக்கு. நெலம் இருக்கு. விவசாயம். அந்தஸ்துன்னு பாத்தா... பத்து ஏணி வெச்சாலும்.."

"என்ன பேசறே வெள்ளி? இருபது வருஷத்துக்கு முன்னாடி என் அந்தஸ்து என்ன? வாடகை சைக்கிள் எடுத்துக்கிட்டு கடை கடையாப் போய் வீட்ல தயாரிச்ச ஊறுகா, பினாயில், பல்பொடி எல்லாம் போட்டுருக்கேன். உனக்குத் தெரியாதா? இன்னிக்கு யாரும் திடுதிப்புன்னு பணம் சேர்த்துடலாம். அதே மாதிரி திடீர்னு எல்லாத்தையும் ஒரே செகண்ட்ல இழந்துடவும் முடியும். ஒரு பூகம்பம் போதும். சுனாமி வருது. குண்டு வெடிக்குது. அதெல்லாம் விடு. இந்த நிமிஷம் எனக்கு நெஞ்சு வலி வந்துச்சின்னா, என்னோட எதை அள்ளிக்கிட்டுப் போக முடியும், சொல்லு."



"அட, ஏன் அப்படில்லாம் பேசறே? நல்ல மனசு உள்ளவங்க ரொம்ப காலம் இருந்தாத்தானே ஊருக்கு நல்லது."

"நான் எப்பவுமே என் தொழில் வளர்ச்சியை இன்னும் பல குடும்பங்களை வாழ வைக்கிற வாய்ப்பாத்தான் பாக்க றேன். அதனால, வர்ற மருமக குடும் பத்துக்குச் சந்தோஷத்தை மட்டும் கொண்டு வந்தாப் போதும். இன்னும் சொல்லப்போனா சாதாரணக் குடும் பத்திலேர்ந்து வர்ற பொண்ணுதான் பாசமா இருக்கும். நீ சொல்ற பொண் ணைக் குமரனுக்குப் பிடிக்கணும். பொண் ணோட போட்டோ இருக்கா?"

"என் மேரேஜ் பீரோவோட வெப் சைட்டுக்குப் போனா இப்பவே பார்த் துடலாம். குமரனையும் கூப்புடேன்."



"அவன் சென்னைக்குப் போயிருக் கான். அவனுக்குப் பிடிக்குமா பிடிக் காதான்னு நானே சொல்லிடுவேன்" என்றபடி கம்ப்யூட்டரை இயக்கி, இண்டெர்நெட்டைத் தொடர்பு கொண்டார் பரமேஸ்வர்.

வெள்ளியங்கிரி எழுந்து இந்தப் பக்கம் வந்து மவுஸ் அசைத்து தனது வலைப் பக்கத்தில் தேடி, "இந்தப் பொண்ணுதான். பேரு மஞ்சரி" என்றார்.

போட்டோ ஸ்டுடியோவில் எடுக்கப் பட்ட அந்தப் புகைப்படத்தில் புன்ன கைத்துக் கொண்டிருந்த மஞ்சரியைப் பார்த்த பரமேஸ்வரின் முகம் மலர்ந்தது.

"வெள்ளி, பாத்ததுமே மனசு சொல்லுது. இவதான் என் மருமக" என்றார். உடனே செல்போன் எடுத்தார். எண்கள் தொட்டார்.

"என்னப்பா, சொல்லுங்க" என்றான் எதிர்முனையில் குமரன்.

"கார் ஓட்டிக்கிட்டிருக்கியா?"

"இல்லைப்பா... கோல்ட் எக்ஸிபி ஷன்ல ஸ்டால் போடறது சம்பந்தமா விசாரிச்சிட்டு வரச் சொன்னீங்களே, அந்த ஆபீஸ்ல காத்துட்டிருக்கேன். என்ன, சொல்லுங்கப்பா."

"உன் செல்லுக்கு ஒரு போட்டோ அனுப்பறேன், பாரு. அஞ்சு நிமிஷம் கழிச்சு நீயே கூப்புடு."

"என்ன போட்டோ, ஏதாச்சும் நகை டிசைனா?"

"இல்லை. உன் வாழ்க்கையை டிசைன் பண்ணப்போற போட்டோ. பாத்துட்டுப் பேசு."

பரமேஸ்வர் மஞ்சரியின் புகைப்படத் தைக் குமரனின் செல்போனுக்கு அனுப்பி வைத்துவிட்டு, "வெள்ளி, இந்தத் தேவ தையை எங்கப்பா பிடிச்சிங்கன்னு கேப்பான் பாரு..." என்றார்.

> "எங்க படத்தோட பல காட்சிகள், ரசிகர்களை சீட் நுனிக்குக் கொண்டு வந்துடுச்சா!"
> "ஆமா சார்... எப்படா எழுந்திருச்சு வெளியே ஓடலாம்னு ரசிகர்கள் சீட் நுனிக்கு வந்துட்டாங்கன்னா பாருங்க!"
> - குட்டி பிரசன்னா

சில நிமிடங்களில் செல்போன் சங்கீதம் பாடியது.

"சொல்லு குமரா, மஞ்சரி எப்படி இருக்கா? அழகா இருக்காளா? பிடிச்சி ருக்கா? எப்ப பொண்ணு பாக்கப் போக லாம்?"

"இருங்கப்பா... வந்து... எனக்கு இப்ப கல்யாணம் வேணாமே..." என்றான் குமரன்.

"ஏன்? ஏன் வேணாம்?" என்றான் சிவா.

"நான் பல தடவை சொல்லியாச்சு. முதல்ல வேலை. அப்புறம்தான் கல்யா ணம். மறுபடியும் சொல்றேன். எனக்கு இப்ப கல்யாணம் வேணாம்" என்றாள் மஞ்சரி.

(தொடரும்)

கடந்த 2003-ம் ஆண்டு, நாட்டில் உள்ள ஆறு மருத்துவக் கல்லூரிகளை தரம் உயர்த்துவது என்று அறிவித்தது மத்திய அரசு. அந்தத் தரம் அகில இந்திய மருத்துவ அறிவியல் கழகத்தின் (AIIMS) தரத்திற்கு இணையாக இருக்குமென்று அறிவிக்கப்பட்டது. அந்த ஆறு மருத்துவக் கல்லூரிகளின் பட்டியலில் முதலிடம் பெற்றிருந்தது திருச்சி, கி.ஆ.பெ.விசுவநாதம் அரசு மருத்துவக் கல்லூரி. இதற்கான முயற்சி எடுத்தவர் அன்றைய பி.ஜே.பி. கூட்டணி அரசில் மத்திய சுகாதாரத் துறை இணையமைச்சராக இருந்த ராசா. ஒவ்வொரு மருத்துவக் கல்லூரிக்கும் இதற்கென தலா நூறு கோடி ரூபாய் நிதி ஒதுக்குவது என்றும் கூறப்பட்டது.

அதன்படி மத்திய சுகாதாரத் துறையின் இணைச் செயலாளர் தலைமையிலான குழு ஒன்று டெல்லியிலிருந்து திருச்சிக்கு வந்திருந்து ஆய்வு செய்தது. 'தரம் உயர்த்துவதற்குப் போதிய இடம், குடிநீர் மற்றும் சாலைப் போக்குவரத்து போன்ற அனைத்தும் இங்கு அமைந்துள்ளன. திருச்சி, கி.ஆ.பெ.வி. அரசு மருத்துவக் கல்லூரி அதற்கு மிகவும் பொருத்தமானது' என்று கூறி, அதற்கான வரைபடத்துடன் மத்திய அரசிடம் அறிக்கை சமர்ப்பித்தது அந்தக் குழு. அந்த அறிக்கை 2004 மார்ச் 26 அன்று வெளியிடப்பட்டது. டெல்லியில் 2004 ஏப்ரலில் அன்று நடைபெற்ற இதற்கான கலந்தாய்வுக் கூட்டத்தில் தமிழக அரசின் நல்வாழ்வுத் துறைச் செயலாளர் மற்றும் திருச்சி கி.ஆ.பெ.வி. அரசு மருத்துவக் கல்லூரி டீனும் பங்கேற்றுக் கருத்துகளைப் பதிவு செய்துள்ளனர். நூறு கோடி ரூபாய்த் திட்டத்துக்கான பணிகள் துவங்கப்பட வேண்டிய சூழ்நிலையில்தான் நாடாளுமன்றத்துக்கான தேர்தல் அறிவிக்கப்பட்டது.

மத்திய அரசில் ஆட்சி மாற்றம் ஏற்



• அன்புமணி

# "துரோகமிழைத்து விட்டார் அன்புமணி!"



**- குமுறும் திருச்சி மக்கள்**


• சித்ரா

பட்டது. பி.ஜே.பி. கூட்டணி அரசின் அமைச்சரவையில் அங்கம் வகித்திருந்த தி.மு.க. - பா.ம.க. ஆகிய இரு கட்சிகளும் காங்கிரஸ் கூட்டணிக்கு மாறி, அமைச்சரவையிலும் இடம் பிடித்தன. மத்திய சுகாதாரத் துறை கேபினட் அமைச்சரானார் பா.ம.க.வின் அன்புமணி.

இந்த ஆண்டு ஜூன் மாதம் 22ம் தேதி டெல்லியில் கூடிய மத்திய அரசின் பொருளாதார விவகாரங்களுக்கான அமைச்சரவைக் குழுக் கூட்டத்தில், நாட்டின் பதின்மூன்று மருத்துவக் கல்லூரிகள் தரம் உயர்த்தப்படும் என்று அறிவிக்கப்பட்டது. 2003-ல் அறிவிக்கப்பட்ட ஆறு மருத்துவக் கல்லூரிகளின் பட்டியலில் திருச்சி முதலிடம் பெற்றிருந்தது. ஆனால், இப்போது அறிவிக்கப்பட்டுள்ள பதின்மூன்று மருத்துவக் கல்லூரிகளின் பட்டியலில் சேலம் முதலிடம் பெற வைக்கப்பட்டிருக்கிறது. அந்தப் பட்டியலில் திருச்சி இடம்பெறவே இல்லை! திருச்சி கி.ஆ.பெ. விசுவநாதம் அரசு மருத்துவக் கல்லூரிக்குக் கிடைத்திருக்க வேண்டிய 'தரம் உயர்த்தும்' திட்டம், சேலம் மோகன் குமாரமங்கலம் அரசு மருத்துவக் கல்லூரிக்கு மாற்றிவிடப்பட்டிருக்கிறது. இந்த மாற்றத்துக்குக் காரணம் அன்புமணியே என்று அடித்துச் சொல்கிறார்கள் திருச்சிகாரர்கள்.

"இந்தப் பிரச்னையை முதன் முதலில் கையில் எடுத்ததே எங்களைப் போன்ற நுகர்வோர் அமைப்புகள்தான். அதன் பின்னரே சில அரசியல் கட்சிகள் உரிமைக் குரல் எழுப்பின. சில தொண்டு நிறுவனங்களும் கைகோத்து வந்துள்ளன. காங்கிரஸ், இந்திய கம்யூ. மற்றும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிகளின் ஆதரவுடன் இது குறித்த போராட்டம் வலுவடைந்துள்ளது. திருச்சி மாநகர மேயர் சாருபாலா தொண்டைமான் இதில் மிகுந்த முயற்சியுடன் செயல்பட்டு வருகிறார். அகில இந்திய மருத்துவ அறிவியல் கழகத்துக்கு இணையாக தரம் உயர்த்தப்படும் போது, அதனால் தமிழ்நாட்டின் மத்திய மற்றும் தென் மாவட்டப் பகுதி பொது மக்கள் அனைவரும் பயனடையலாம். அன்புமணியின் இந்தச் செயல்பாடானது, காவிரி டெல்டா பகுதியின் ஐந்து மத்திய அமைச்சர்களின் முகங்களில் கரி பூசியது போல் ஆகிறது. இது திருச்சி மாவட்டத்துக்கு மட்டுமல்ல, வன்னியர்கள் பெரும்பாலும் வசிக்காத தமிழ்நாட்டின் தென் மாவட்டப் பகுதிப் பொதுமக்களுக்கும் அன்புமணி செய்துள்ள துரோகம்!'' என்று ஆவேசத்துடன் பேசுகிறார் டெக்கான் நுகர்வோர் உரிமைப் பாதுகாப்புக் கழகத்தின் மாநிலச் செயலாளர் பாரதராஜா.

> “ ஐந்து மத்திய அமைச்சர்களின் முகங்களில் கரிபூசி விட்டார் அன்புமணி! ”

''விமான நிலையம், சிறப்பு மிகுந்த ரயில் நிலையம், குடிநீர் ஆதாரம் போன்ற அனைத்துக் கட்டமைப்பு வசதிகளுடன் தமிழ்நாட்டின் மையப் புள்ளியில் அமைந்திருக்கும் திருச்சிக்குக் கிடைக்கவிருந்த திட்டத்தினை, சேலத்துக்குத் தட்டிக்கொண்டு போனதில்

• பாரதராஜா



எவ்வித நியாயமும் இல்லை. இதற்கென இரண்டு ஆண்டுகளாக ஆய்வு செய்த மத்திய சுகாதாரத் துறை உயர் அதிகாரி மற்றும் அலுவலர்களின் உழைப்பு அனைத்தும் ஒட்டுமொத்தமாக வீணடிக்கப்பட்டுள்ளது. தன்னுடைய இன மக்கள் பெரும்பாலும் வசிக்கின்ற மாவட்டங்களுக்கு இத்திட்டம் பயன்பட வேண்டுமென சேலத்துக்கு இதனைக் கொண்டு சென்று சேர்த்துள்ளார் அன்புமணி. இது குறித்து எங்கள் தொண்டு நிறுவனம் சார்பாக கோரிக்கை மனு ஒன்றினை தமிழக முதல்வர், பாரதப் பிரதமர், இந்தியக் குடியரசுத் தலைவர் ஆகியோருக்கு அனுப்பி வைத்துள்ளோம்" எனக் குறிப்பிட்டார் அமிர்தம் சேவை நிறுவனத்தின் அறங்காவலரும், வழக்குரைஞருமான எம்.சித்ரா.

"கடந்த தேர்தலில் அவர்களுக்கு (பா.ம.க.) சேலம் மாவட்டப் பகுதிகளே வெற்றிக்குக் கைகொடுத்துள்ளன. அதனை மனத்தில் வைத்தே வன்னியர் அதிகம் வாழ்கின்ற பகுதி மக்கள் பயனடையட்டும் என்று செயல்பட்டிருக்கிறார். நாங்கள் இதில் திருச்சியா? சேலமா? என்று பிரித்துப் பார்க்கவில்லை. தமிழகத்தின் எந்த மூலை முடுக்கிலிருந்தும் பொது மக்கள் குறைந்த பயண தூரம், குறைந்த பணச் செலவில் திருச்சி வந்து சிகிச்சை பெற்றுச் சென்றுவிடலாம். ஆனால், சேலம் அப்படி அல்ல. அதனைச் சுற்றி அமைந்திருக்கும் நான்கைந்து மாவட்டப் பகுதி மக்களுக்கு மட்டுமே பயன்தரும். திருச்சியில் அது அமையப் பெற்றால், காவிரி டெல்டா வரைக்குமான அனைத்து மாவட்ட பொது மக்களும் எளிதில் பயன் அடையலாம்!'' என்றார் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் திருச்சி மாவட்டச் செயலாளர் எம்.செல்வராஜ்.

• செல்வராஜ்

இப்பிரச்னை குறித்து திருச்சி மேயர் சாருபாலா தொண்டைமான் என்ன சொல்கிறார்?



• சாருபாலா

"இதற்கு முன்னர் சென்னை உயர்நீதி மன்றக் கிளையும் திருச்சிக்கு வந்திருக்க வேண்டியது. மதுரைக்குக் கொண்டு போகப்பட்டு விட்டது. இப்போது மருத்துவமனைப் பிரச்னை. ஆக, மத்திய - மாநில அரசுகளால் திருச்சி மாநகரம் புறக்கணிக்கப்படுகிறதோ என்கிற ஐயம் ஏற்படுகிறது. மருத்துவக் கல்லூரி தரம் உயர்த்தும் நூறு கோடி ரூபாய் அளவிலான திட்டத்தினை, மீண்டும் திருச்சி கி.ஆ.பெ. விசுவநாதம் அரசு மருத்துவக் கல்லூரிக்குப் பெற்றுத் தந்திட போராடி வருகிறோம். மறியல், அறப் போராட்டம், மனிதச் சங்கிலி எனத் தொடர்கிறது.

இது தொடர்பாக கூட்டு நடவடிக்கைக் குழு சார்பில், அண்மையில் தமிழக முதல்வரிடம் நேரிடையாக முறையிட்டுள்ளோம். எங்கள் குழு சார்பாக டெல்லியில் பிரதமரையும், சோனியா காந்தியையும் நேரில் சந்தித்து முறையிட நேரம் கேட்டிருக்கிறோம். தற்போது அறிவித்திருக்கும் பதின்மூன்று மருத்துவக் கல்லூரிகளில் ஜம்மு காஷ்மீர், உத்தரப்பிரதேசம், ஆந்திரா ஆகிய மூன்று மாநிலங்களில் தலா இரண்டு மருத்துவக் கல்லூரிகள் இடம் பெற்றிருக்கின்றன. அதுபோல தமிழகத்துக்கும் இரண்டு எனக் குறிப்பிட்டு, சேலத்தோடு திருச்சிக்கும் அத்திட்டத்தினை அறிவிக்க வேண்டும் என்பதே எங்கள் கோரிக்கை!" என்கிறார் சாருபாலா தொண்டைமான்.

இது விஷயமாக அமைச்சர் அன்புமணியைத் தொடர்பு கொள்ள முயன்றோம். கடைசிவரை அவரிடமிருந்து பதிலே இல்லை.

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

படங்கள் : **திருச்சி விஜய்**

# உலகம் இவ்வளவுதான்!

மூன்நூறுக்கும் அதிகமானோர் இறந்து விட, அரை லட்சத்துக்கும் அதிகமானோர் லெபனான் நாட்டைவிட்டே வெளியேறிக் கொண்டிருக்கிறார்கள். லெபனானில் வசிக்கும் இந்தியர்களின் எண்ணிக்கை பன்னிரண்டாயிரம். இவர்களில் ஒரு சிறு பகுதியினர் தாய்நாடு திரும்பியுள்ளனர். மற்றவர்களை மீட்டுவர போயிங் விமானங்களும் போர்க் கப்பல்களும் அனுப்பப்படுகின்றன.

லெபனான் மத்திய தரைக்கடல் ஓரமாக உள்ள, சிரியாவுக்குள்ளே புதைந்து கிடக்கும் நாடு. பெய்ரூட்டைத் தலைநகராகக் கொண்ட இந்த நாட்டில் கலவரங்கள் ஏற்பட, இஸ்ரேல் அங்கு நடத்திவரும் குண்டுவீச்சுகள்தான் முக்கிய காரணம். அதாவது இஸ்ரேலுக்கும் ஹிஸ்புல்லா என்ற தீவிரவாத இயக்கத்திற்குமிடையே நடந்து வரும் 'யுத்தத்தில்' அப்பாவிகள் பாதிக்கப்படுகிறார்கள்.

லெபனானில் இன்று நேற்றல்ல, கடந்த பதினான்கு வருடங்களாகவே தொடர்ந்து போர்தான். சிரியா, பாலஸ்தீனம், இஸ்ரேல் என்று பல நாட்டினரும் தங்களுக்குள் இருக்கும் பகைமைக்கு வடிகாலாக லெபனான் மண்ணைப் பயன்படுத்திக் கொண்டு வருகிறார்கள்.

சிரியாவின் ராணுவம் லெபனானில் தொடர்ந்து தங்கிக் கொண்டிருந்தது. சென்ற ஆண்டு லெபனானின் முன்னாள் பிரதமர் ஹரிரி படுகொலை செய்யப்பட்ட பிறகு 'இந்தக் கொலையில் சிரியாவுக்குப் பங்கு இருக்கிறது' என்று பெரும் கொந்தளிப்பு ஏற்பட, அதற்குப் பிறகே சிரியாவின் இராணுவம் லெபனானிலிருந்து பின்வாங்கியது.

லெபனான் பல விஷயங்களில் தாராளம் காட்டும் நாடு. அரசியலமைப்புப்படி அங்கு ஜனாதிபதியாக இருப்பவர் கிறிஸ்தவராகத்தான் இருக்க வேண்டும். பிரதமர் சன்னி பிரிவு முஸ்லிமாகவும், பாராளுமன்ற அவைத் தலைவர் ஷியா பிரிவு முஸ்லிமாகவும் இருந்தாக வேண்டும். லெபனான் பாராளுமன்றத் தொகுதிகள் கிறிஸ்தவர்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே சரி பாதியாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இத்தனைக்கும் அங்கு எழுபது சதவிகித மக்கள் முஸ்லிம்கள்தான்.

ஒரு காலத்தில் இஸ்ரேலும் லெபனானும் நட்பு நாடுகளாக இருந்தவைதான். 1982-ல் இஸ்ரேல் இராணுவம் தெற்கு லெபனானில் நுழைந்தபோது லெபனான் மக்கள் மலர்களும் மிட்டாய்களுமாக அவர்களை வரவேற்றனர். அதற்குக் காரணம் தங்கள் நாட்டில் குடியேறிய பாலஸ்தீனிய போராட்டவாதிகள் எப்படியாவது வெளியேறினால் போதும் என்ற எண்ணம்.

இப்போது இஸ்ரேல் லெபனானைத் தாக்குவதற்கு 'ஹிஸ்புல்லா' இயக்கம்தான் முக்கிய காரணம். அமெரிக்காவின் பார்வையில் இது ஒரு கொடும் தீவிரவாத அமைப்பு.

எங்கும் முஸ்லிம்களின் ஆட்சிதான் நிலவ வேண்டும் என்பது ஹிஸ்புல்லாவின் தீர்மானம். அதுவும் யூதர்களுக்காக உருவாக்கப்பட்ட (பாலஸ்தீனிய முஸ்லிம்களை வெளியேற்றிய) இஸ்ரேல் இருக்கவே கூடாது



• லெபனானிலிருந்து வெளியேறும் மக்கள்...

ஒரு தேசம்.

ஏராளமான நிதி உதவிகளை சிரியாவும் ஈரானும் இந்த அமைப்புக்குச் செய்கின்றன என்று குற்றம் சாட்டுகிறது அமெரிக்கா. ஆனால் சிரியா "நாங்கள் ஹிஸ்புல்லாவை கொள்கை அளவில் ஆதரிக்கிறோம். ஆனால் ஆயுத உதவிகள் செய்வதில்லை" என்கிறது.

ஹிஸ்புல்லா மற்ற தீவிரவாத அமைப்பு களிலிருந்து கொஞ்சம் வேறுபடுகிறது. அது லெபனான் அரசில் பங்கேற்கிறது. லெப னான் பாராளுமன்ற உறுப்பினர்களாக ஹிஸ்புல்லா இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் 14 பேர் இருக்கிறார்கள்.

இரண்டு இஸ்ரேலிய இராணுவ வீரர்களை ஹிஸ்புல்லா கைது செய்திருப்பது தான் இஸ்ரேலை உசுப்பேற்றி யிருக்கிறது. "மொத்த உலக நாடு களும் சேர்ந்து செயல்பட்டாலும் இந்த இருவரையும் விடுவிக்க முடியாது. வேண்டுமானால் எங்களுடன் பேச்சுவார்த் தைகள் நடத்தி இருதரப்பிலிருந்தும் சிறைக் கைதிகளை மாற்றிக் கொள்ளலாம்" என்கிறது ஹிஸ்புல்லா.

ஹிஸ்புல்லா, இஸ்ரேலிய ராணுவத்தின ரைச் சிறைப்படுத்த இரண்டு காரணங்கள் இருக்க வாய்ப்பு உண்டு. அப்போதுதான் இத்தாலிய சிறையில் உள்ள தமது படை யினரை மீட்க முடியும். தவிர, இஸ்ரேலின் கவனத்தைத் தன் பக்கமாகத் திருப்பினால், இஸ்ரேல் மிதவாதத்துக்கு மற்றோர் எதிரி யான ஹமாஸ் அமைப்பு தன்னை நிலை நிறுத்திக் கொள்ளும்.

இஸ்ரேலிய இராணுவத்தினர் இருவரை லெபனான் கைது செய்ததை முன்பொரு சமயம் இளவரசர் பெர்டினான்ட் கொலை செய்யப்பட்ட சம்பவத்தோடு ஒப்பிடுகிறார் கள் சிலர் (அந்தக் கொலைதான் முதலாம் உலகப்போருக்குச் காரணமாக அமைந்தது).

ஜி.எஸ்.எஸ்

பல நாடுகள் போரில் இப்போதைக்கு இறங்குவது ஒருவிதத்தில் சாத்தியம்தான். சிரியாவைக் கடுமையாக எதிர்க்கிறது இஸ்ரேல். காரணம், சிரியா இஸ்ரேலியன் அமைதியை அழித்துக் கொண்டிருக்கும் ஹமாஸ் இயக்கத்துக்கு ஆதரவளிக்கிறது. இதனால் கடுப்பான இஸ்ரேல் சிரிய ஜனாதிபதியின் வீட்டுக்கு மேல் தனது போர் விமானத்தை அனுப்ப முடிவெடுத் தது.

இந்த நிலையில் சிரியா ஹிஸ்புல்லா இயக்கத்தையும் ஆதரிக்கிறது. ஈரானும் ஹமாஸ், ஹிஸ்புல்லா இயக்கங்களை ஆதரிக் கிறது. இஸ்ரேல் சிரியாவைத் தாக்கினால், தானும் களத்தில் குதிப்பதாக அறிவித்திருக்கிறது ஈரான்.

ஈரான் இஸ்ரேலைத் தாக்கி னால், அமெரிக்காவுக்குத் தானும் களத்தில் நேரிடையாகப் பங்கேற்க நல்ல காரணம் கிடைத்துவிடும். இன்றைய நிலையில் அமெரிக்கா, ஈரானை வெறுக்கிறது. இஸ்ரேல் அமெரிக்க ஆதரவுடன் உருவான நாடு.

என்றாலும் இது உலகப் போராக முற்று வதற்கு வாய்ப்பில்லை. காரணம், இப்போது பெரிய நாடுகளுக்கிடையே போர் ஒப்பந்தங் கள் இல்லை. அதனால் ஒரு நாடு போரில் ஈடுபட்டால், இன்னொரு நாடு அதற்குத் துணையாகப் போரில் குதிக்க வேண்டு மென்பதில்லை. தவிர, உலக அமைதிக்கான அமைப்புகள் தோன்றிவிட்டன.

அண்டை நாடுகள் நம்பிக்கைக்கு உகந்த வையாக இல்லாவிட்டால் எவ்வளவு சிக்கல் என்பதற்கு இஸ்ரேல் ஓர் எடுத்துக்காட் டாகவே தொடர்ந்து இருந்து வருகிறது. இந்தியாவுக்கும் இதில் கற்றுக்கொள்ள நிறைய பாடங்கள் உண்டு.

# மூன்றாம் உலகப் போருக்கு முயற்சிக்கிறதா இஸ்ரேல்?

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 2006 - முடிவுகள்

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் இவ்வாண்டும் இளம் எழுத்தாளர்கள் உற்சாகமாகக் கலந்து கொண்டு ஆயிரக்கணக்கான கதைகளை அனுப்பி இருந்தனர். இறுதிச் சுற்றில் கண்ணதாசன் பதிப்பக உரிமையாளர் காந்தி கண்ணதாசன், கவிஞர் இளம்பிறை, கல்கி ஆசிரியர் சீதா ரவி ஆகியோர் பங்கேற்று கீழ்க்காணும் சிறுகதைகளைப் பரிசுக்குரியனவாகத் தேர்ந்தெடுத்தனர்.

**முதல் பரிசு ரூ.10,000**
உண்மை! - மனோரஞ்சிதம் சு.பாபு, சேலம் (அறிமுக எழுத்தாளர்)

**இரண்டாம் பரிசு ரூ.7,500**
அட்டை! - ஜெரா, மேட்டூர் அணை

**மூன்றாம் பரிசு ரூ.5,000**
பார்வை! - கே.பி.ஜனார்த்தனன், நாகர்கோவில்

**ஆறுதல் பரிசு தலா ரூ.2,500**
1. கனவு பலிக்கும் - வே.குருநாதன், ஆ.லட்சுமிபுரம்
2. கொடை வள்ளி - செ.செண்பகக்கண்ணு, தென்காசி

முதல் பரிசு பெற்ற கதை இந்த இதழில்... பிரசுரத்துக்குத் தேர்வான கதைகளின் பட்டியல் அடுத்த இதழில்...

பரிசு பெற்றவர்களுக்கு வாழ்த்துக்கள்! உற்சாகத்துடன் கலந்துகொண்ட அனைவருக்கும் நன்றி! (ஆர்.)





# METRO TRAVELS

Package Tour Operators

67, Basha Street, Choolaimedu, Chennai - 600 094

Ph.No. 23742994/23742466/Fax No. 23742882 Cell No. 9841577615/9841136563

E.Mail : metrotravelsindia@yahoo.co.in Website : metrotravelsindia.com

Authorised Agent



GUJARAT TOURISM

Authorised Agent







**Tour - 1**

காசி - அலஹாபாத் - ரிஷிகேஷ் - டில்லி - ஆக்ரா: 12 நாட்கள் ரூ 6,150/-

புறப்படும் நாள்: - **18.09.2006, 16.10.2006**

**Tour - 2**

பூரி - கோனார்க் - கொல்கத்தா - டார்ஜிலிங்- கேங்டாக் (சிக்கிம்) நாதுலாபாஸ்: 12 நாட்கள் ரூ 6,200/-

புறப்படும் நாள்: - **26.09.2006, 24.10.2006**

(ரயில், பஸ் கட்டணம், உணவு மற்றும் தங்கும் வசதியுடன்)

**Tour - 3**

சிங்கப்பூர் - மலேசியா

Kula Lumpur - 2 Nights / Genting Highland - 2 Nights / Singapore - 3 Nights.

Incl: Airfare/Visa/N.O.C/A/c Accommodation/ A/c Coach/Buffet B/F/Entry fee - Rs. **33,000/-**

புறப்படும் நாள்: - **9.09.2006, 18.10.2006**



திண்டுக்கல் - ரோட்டரி கிளப் மூலம் 70 நபர்கள் Agra, Delhi, Kullu Manali சென்று மனநிறைவுடன் வந்த சான்றிதழ்

**தினசரி - திருப்பதி - A.A.D தரிசனம் - Volvo A/c Bus**

• Tourக்காகும் மொத்த தொகையில் - இரயில் மற்றும் பஸ் கட்டணம் L.T.C மூலம் claim செய்துகொள்ளலாம்.

# J.C. முதியோர் இல்லம்

**(A Unit of Janakiammal Trust) Regd.**

"Pay One Time - Money.
Live Life Time - Happy"
- We got Life - Members pattern too.

இயற்கை சூழ்நிலை, படுக்கை வசதிகள், சுவையான சைவ உணவு, இலவச மருத்துவம், தூய்மையான பராமரிப்பு, குறைந்த கட்டணம், அன்பான கவனிப்பு, மனம் குளிரும் சேவை.

**ஊனமுற்றவர்களுக்கும், படுத்தபடுக்கையில் உள்ளவர்களுக்கும் சேவை செய்ய எங்கள் இல்லம் காத்திருக்கிறது!**

## ENJOY YOUR SECOND CHILDHOOD DAYS AT :

Plot No.30 & 31, D.No.4, Murugan Kovil First Street, (Near Jain Temple) Vivekananda Nagar, Kolathur, Chennai - 99. Phone : 55171667, 26208400 Mobile : 9282173089

**Donations accepted for Home under Public Charitable Trust**

## சிறுகதை

அவனுக்கு எட்டு வயதிருக்கும்.

அவனது குடிசையிலிருந்து 'ஓ'வெனக் கத்தினால் கேட்கும் தூரத்தில் ஒரு கோயில். காமாட்சியம்மன் கோயில் என்று சொன்னாலும், நான்கு தூண்கள்; நாற்பது பேர் உட்காரலாம். அதன் சுவரை இணைத்தபடி, கிழக்கு பார்த்தபடி வாசல் கொண்ட தொடக்கப்பள்ளி. அதில்தான் மூன்றாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்தான் அவன்.

மதியம் சோறு போடுவார்கள். கோதுமை ரவை உப்புமா மாதிரி. போஸ்டர் ஒட்டலாம். அவ்வளவு 'கொழ கொழ'. எல்லா குடிசைகளின் பிள்ளைகளும் அதற்காகவே படிக்க வந்தார்கள், அவனை மாதிரி.

அவன் ஆசிரியை நல்ல சிகப்பு; குண்டு; ஆனால அழகு. எப்போது




மனோரஞ்சிதம் சு.பாபு

பார்த்தாலும் 'நகச்சாயம்' பூசிக் கொண்டிருப்பாள்.

அவன் என்றைக்குமே முன் வரிசை நடுவில்தான் தரையில் உட்காருவான். அன்றும் மேசைக்கருகில் பசங்களுடன் இளலிக கொண்டிருந்தான். வழக்கம் போல் நகச்சாயப் பூச்சு நடந்தது. தனது கைப்பையில எடுத்துக்கொண்டு வருவாள்.

கைப்பை மிக அழகாயிருந்தது. தொட்டுப் பார்க்க ஆசையாக வந்தது. முழங்காலிட்டபடி தொட்டுத் தடவிப் பார்த்துக் கொண்டிருந்தான். 'சில்'லென இருந்தது. அவ்வளவுதான்.

ஆசிரியை பையை எடுத்தாள் முகம் சந்தேகத்தில் கடுமையானது.

அதட்டலாய் "என்னடா பண்ற?" என்றாள். அவன் பயந்துவிட்டான். "இல்ல டீச்சர்... சும்மா தொட்டுப் பார்த்தேன்" என்றான்.

"என்னத்தடா தொட்டுப் பார்த்த... காச கீச எடுத்தியாடா ராஸ்கல்..."

"இல்ல டீச்சர். நா எடுக்கல. பை நல்லாருந்திச்சி..." அதற்குள் அவனுக்கு வார்த்தையே வரவில்லை. உடனே ஆசிரியை பையைத் துழாவி அலசி ஆராய்ந்து, உறுதியான முகபாவனையோடு நிமிர்ந்தாள்.

"திருட்டுப் பயலே... பொய்யா சொல்றே. எங்கடா இருபது ரூபா... எங்கடா... உன்ன..."

குச்சி வந்தது. அவன் மிகவும் மிரண்டு போய் 'இல்ல இலல' என்று சொல்வதற்குள் 'சுரீர் சுரீ'ரென்று முதுகும் காலும் அடிபட்டன.

அவன் நெளிந்து, பதறி, கதறினான்.

குறுக்குத் தடுப்புகள் இல்லாத பள்ளியாக இருந்தது. அதனால எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள். பக்கத்து வகுப்பு ஆசிரியைகள் உடனே வந்தார்கள்.

"என்னங்க டீச்சர்... எதுக்கு இப்படிப் போட்டு அடிக்கிறீங்க?" என வினவினார் ஓர் ஆசிரியை.

"பாருங்க டீச்சர் திருட்டு புத்தி பய... என் பேக்லேர்ந்து இருபது ரூபா திரு

டிக்கிட்டான்" என ஆதங்கமாய் முறையிட்டாள். யாரோ தலைமையாசிரியரிடம் விஷயத்தைச் சொல்லிவிட்டார்கள்.

தலைமையாசிரியர் வந்தார். "ஏய் இங்க வாடா." போனான்.

"சத்தியமா இவன்தான் சார் பேக்லேர்ந்து பணத்தை எடுத்திருக்கணும்" அவன் வகுப்பாசிரியையே அவன்மீது ஆழமாகக் குற்றம் சாட்டினாள்.

"டீச்சர், இன்டர்வெல்லுக்கு முன்னாடி பையன் எங்கும் போகலையே.. டோண்ட் ஒர்ரி. இங்க வாடா.." என்றவர், அவன் சட்டையையும், கிழிந்த கால் சட்டையையும் கைவிட்டுத் துழாவிப் பார்த்தார்.

"ஒண்ணுமில்லியே டீச்சர்" என்றார். ஆளாளுக்கு அவனைத் துழாவினார்கள்.

அவன் மிகவும் அவமானமாக உணர்ந்தான். அதனாலேயே அவனுக்கு மேலும் அழுகை வந்தது.

"நீ எடுக்கலங்கிறே... டீச்சர் பணம் காணோம்ங்கிறாங்க. நீதானடா பையை நோண்டிட்டிருந்தே" என்றார் தலைமையாசிரியர்.

அவன் திக்கித் திக்கிச் சொன்னான். "சார்... நானு படமெல்லாம் வரைவேன். எங்கப்பா ஆர்டிஸ்டு. அவரு செத்துப்



போயிட்டாரு. பையில 'பூ' படம் நல்லா ருந்திச்சி. அத வரையறதுக்கு பாத்துக்கிட்டேன் சார். பணமெல்லாம் நா எடுக்கல சார்."

ஆசிரியை பதறினாள். "பாத்தீங்களா பாத்தீங்களா சார். எவ்வளவு விவரமா பேசறான். இவனையா நம்பறீங்க. நடிக்கிறான் சார். நம்பாதீங்க. திருட்டுப் பய, திருட்டுப் பய."

"டீச்சர், ப்ளீஸ். கொஞ்சம் டென்ஷன் ஆகாம இருக்கிறீங்களா? உங்க கிளாஸ் ஸ்டூடண்ட நீங்களே இப்படிப் பேசாதீங்க."

"ஆமா... படம் வரையறானாம். பெரிய லியோ டால்ஸ்டாயின்னு நெனப்பு."

"அய்யோ டீச்சர். அது எழுத்தாளரு. லியானார்டோ டாவின்சிதான் ஓவியரு."

"என்னமோ தொலையுது சார். அவன நல்லா விசாரிங்க" என்றார்.

அவனை மணலில் முட்டிப்போடச் சொன்னார்கள். அவன் அழுகையின் தேய்மானத்தோடு செய்தான்.

கொஞ்ச நேரம் கழித்துத் தலைமையாசிரியர் அறைக்கு அழைத்துச் செல்லப் பட்டான்.

இப்போது அறையில் அவனும், தலைமையாசிரியரும், அவன் வகுப்பாசிரியையும் இன்னும் இரண்டு ஆசிரியைகளும் அவனைச் சூழ்ந்திருந்தனர்.

ஏதோ ஒரு கணத்தில் அவனுக்குள் புரிந்துகொள்ளப்படாத துணிச்சல் வந்திருந்ததால், அவன் அழுகை நின்றிருந்தது.

அவனிடமிருந்து உண்மையை வாங்க முடியாது என நினைத்தார்களோ என்னவோ, கொஞ்சம் இதமாய் இறங்கி வந்தார்கள்.

"த பாரு கண்ணா... நீ நல்ல பையனா தெரியறே. உண்மையச் சொல்லுப்பா. நீ எடுத்தியா இல்லியா?" எனக் கேட்டார்.

மறுபடியும் "சத்தியமா எடுக்கலே சார். சும்மா பேக்கு பார்த்தேன்" என்றான்.

"எடுக்கலேன்னா எங்கடா போயிரும்?" சட்டென்று அவனுக்கு நினைவு வந்தது.

"சார், காலையில டீச்சர் ஸ்கூல் ஆயாகிட்ட சொல்லி மசால் தோசை வாங்கியாரச் சொன்னாங்க. அப்ப குடுத்தாங்க, பாத்தேன்" என்றான்.

"அடப்பாவி... அதெல்லாம் உன் கண்ண உறுத்திச்சா. அது வேற பணம் சார். எவ்வளவு சாமர்த்தியமாப் பேசறான் பார்த்தீங்களா சார். இன்னொண்ணு, காலையில ஸ்கூல் ஆரம்பிச்சப்புறம் நான் அட்டென்டென்ஸ்ல கையெழுத்து போட இங்க ஆபீஸ் வந்தப்ப... இந்தப்பய வீட்டுக்கு ஓடிட்டு வந்திருக்கான் சார். இப்பத்தான் புள்ளைங்க சொன்னாங்க."

புதிய தடயம் கிடைத்தவர்களாக எல்லோரும் மீண்டும் வெளிச்சமானார்கள்.

தலைமையாசிரியர் "பணத்தைக் கொண்டுபோய் வீட்ல குடுத்தியாடா..." மீண்டும் பிரம்பு உயிர் பெற்றது. அவனுக்கு அழுகை வந்தது.

"இல்ல... சார்..." என்று கேவினான்.

"அப்புறம் எதுக்குடா வீட்டுக்குப் போனே?"

"பசிச்சது சார். அதான் வீட்டுக்கு

''காலம் ரொம்பத்தான் கெட்டுப் போச்சு.''

''ஏன் சார் அப்படிச் சொல்றீங்க?''

''மெக்கானிக் 'உங்க பேட்டரிக்குப் புது கார் மாத்தணும்'னு சொல்றான்.''

- பா.விஜயசாரதி

ஓடினேன்...."

"பசிச்சதா? காலையில வர்றப்ப சாப்பிடலை?"

"இல்ல சார். நேத்து ராத்திரிலேர்ந்து சாப்பிட வீட்ல ஒண்ணுமில்ல சார். காலையில எங்கம்மா 'பத்து மணிக்கு வாடா வெல்லத்தண்ணி வச்சி தர்றேன்'னாங்க. எனக்கு ரொம்பப் பசிச்சதாலே வீட்டுக்குப் போனேன் சார்..." என்று அழுகையோடு சொன்னான்.

சட்டென்று எல்லோரும் மௌனமானார்கள். அவன் மீது மிகவும் இரக்கம் கொண்டார்களோ என்னவோ.

"என்ன டீச்சர் பண்ணலாம்?" அவன் வகுப்பாசிரியை கொஞ்சம் யோசித்து விட்டு "போனாப் போவுது விட்டுடுங்க சார்" எனச் சலிப்புடன் சொன்னாள்.

தலைமையாசிரியர் கொஞ்சம் நிதானித்து கடைசி முறையாக முயற்சி செய்வது போல் சொன்னார்.

"அங்க பாரு... கடவுள் உன்னைப்

பாக்குறார்..." அவன் கண்களை உயர்த்திப் பார்த்தான். சட்டம் போட்ட படத்தில் இயேசு ஓர் ஆட்டுக்குட்டியை நெஞ்சோடு அணைத்து, ஒரு பக்கம் தலைசாய்த்துப் பார்த்தார். சுற்றிலும் ஆடுகள் நின் றிருந்தன.

"கடவுள் உன்னைப் பாக்குறாரா... இப்ப உண்மையச் சொல்லு. நீ பணத்தை எடுத்தியா இல்லியா? சொல்லு. பொய் சொன்னா நரகத்துக்குப் போவோம்... உண்மையச் சொன்னா கடவுள் நம்மள மன்னிப்பாரு. நானும் உன்னை மன்னிச்சு விட்டுர்றேன்; சொல்லு" எனக் கேட்டார்.



"சத்தியமா... இயேசு மேல ஆணையா... நான் பணத்தை எடுக்கலே சார்" என்றான் மிகத் தைரியமாக.

இதற்குமேல் என்ன செய்வதென்றே யாருக்கும் புரியவில்லை.

"ஓ.கே. டீச்சர். இனி வேலைக்காவாது. பையன் ரொம்பத் துணிச்சலாயிருக்கான். என்ன பண்றது? விட்டுற வேண்டியது தான்" என்றார் தலைமையாசிரியர்.

வகுப்பாசிரியை அரைகுறை மன தோடு "சரி விட்டுடுங்க" என்றாள்.

அவனுக்கு விடுதலை கிடைத்தது போலிருந்தது. பின்னர், கடைசி கடைசி யாக இன்னொரு ஆசிரியை அவனருகில் வந்தாள்.

"இத பாருப்பா... உனக்குப் போட்டுக்க நல்ல சட்டை இல்லையா?" எனக் கேட்க வும், "ஆமாம்" என தலையசைத்தான்.

"சரி, உனக்கு இப்பவே ரெண்டு செட்டு சட்டையும் டவுசரும் தர்றோம். எடுத்தேன்னு உண்மையை ஒத்துக்க. சொன்னீனாக்கா, புது டிரெஸ் தர்றோம்" என்றாள்.

புதுத் துணி என்றவுடன் அவனுக்கு ஆசையாயிருந்தது. என்ன சொல்வ தென்றே தெரியவில்லை. இயேசுவின் படத்தைப் பார்த்தான். 'புது டிரெஸ்... புது டிரெஸ்' கொஞ்சம் யோசித்துவிட்டுச் சொன்னான்.

"ஆமாம் நான்தான் எடுத்தேன்."

உடனே அவர்களிடையே ஆரவாரம் தொற்றிக்கொள்ள, "பாத்தீங்களா சார், பையன் உண்மையை ஒத்துக்கிட்டான்" என்றனர். ஓகோ! இதுதான் உண்மையா என அவனுக்கும் பரபரப்பு ஒட்டிக் கொண்டது. அவனும் இலேசாகச் சிரித்துப் பார்த்தான்.

தலைமையாசிரியர் அவன் முகத்தைப் படித்திருப்பார் போலத் தெரிந்தது. அவர் அவர்களோடு ஒட்டாமல் யோசனையாய் உதட்டைச் சுழித்துக் கொண்டார். "இந்தப் பையனோட அம்மாவ வரச் சொல்லுங்க" என்று மட்டும் சொன்னார்.

அவனுக்குப் புதுத் துணி கிடைக்கும் மகிழ்ச்சியிருந்தாலும், அம்மா ஓட்டமும் நடையுமாய், முந்தானையால் கண்ணைக் கசக்கிக்கொண்டு வருவதைப் பார்க் கும்போது மனதுக்குள் பீதி புயலெனக் கிளம்பியது. தாம்புக் கயிறால் விளாசி, விடுவாளே...

அவனை வெளியே நிற்க வைத்து விட்டு அம்மாவை மட்டும் உள்ளே அழைத்துத் தலைமையாசிரியர் என் னென்னமோ சொல்லிக் கொண்டிருந் தார். அம்மா மன்றாடுவதும் அழுவதும் கேட்டது.

சற்றைக்கெல்லாம் அழுக்குப் புடை வைத் தலைப்பில் மூக்கை உறிஞ்சியபடி கலங்கிய கண்களுடன் உள்ளிருந்து வந் தவள், அவனை முறைத்துப் பார்த்துவிட்டு, பல்லைக் கடித்தபடி "புள்ளையாடா நீ?" என அடிக்க வந்தாள். அவன் விலகி ஓடி நின்றான். 'எல்லாருமே என்னை அடிக்




## புதிய புரட்சி!

குடியிருக்க வீடும், குடும்பப் பாதுகாப்பும் எல்லோரும் பெற வேண்டும் என்ற நோக்கத்துடன் தனி மனித மேம்பாட்டுக்காக ஆரம்பிக்கப்பட்ட நிறுவனம் ரிச் இந்தியா. இதன் மூன்றாம் ஆண்டு தொடக்கவிழா அண்மையில் சென்னை காமராஜர் அரங்கில் நடைபெற்றது. விழாவில் பேராசிரியர் பெரியார்தாசன் உள்ளிட்டோர் கலந்து கொண்டனர்.

தமிழக நகரங்கள், கிராமங்களில் மொத்தமாக நிலத்தை வாங்கி, அதனை சிறுசிறு பகுதிகளாக்கி குறைந்த விலையில் மக்களுக்கு விற்பனை செய்து வருவதன் மூலம் ரிச் இந்தியா, ரியல் எஸ்டேட் துறையில் புதிய புரட்சியினைக் கொண்டு வந்துள்ளது. ஆர்.சந்திரசேகர் மற்றும் டி.அருளானந்த் இதன் இயக்குநர்களாகச் செயல்பட்டு வருகின்றனர்.

இறாங்க. நான் உண்மையத்தானே சொல்லிக்கிட்டு இருக்கிறேன். ச்சே... என்ன அம்மா இது?"

இதற்குள் பள்ளி முடிந்து மணி அடிக்கவும் இடமே பரபரப்பானது. எல்லோரும் மதிய சாப்பாட்டுக்குத் தட்டு தூக்கிக் கொண்டு வரிசைக்காக முண்டியடித்து ஓடுவது, அவனுக்கு அதிகமாகப் பசியைத் தூண்டியது.

"நானும் போவட்டா..." என அம்மாவிடம் கேட்டான்.

அவளால் என்ன சொல்ல முடியும்?

"வாயை மூடிக்கிட்டு வாடா..." என்றாள்.

சிலேட்டுப் பையை எடுத்துக் கொண்டு அம்மாவின் கைப்பிடிக்குள் மாட்டிக்கொண்டு வெளியேறினான்.

"போச்சு... சோறு போச்சு... ம்... மா... சோறும்மா.. பசிக்குதும்மா..." என்றவுடன்,

'பட்'டென்று தலையில் அடித்தாள். அவனுக்கு வலித்தது மதியம் சோறு கிடைக்கவில்லையே என்பதால்தான்.

வீடு வந்து சேர்ந்ததும் அம்மா அவனைப் பார்த்துக் கேட்டாள். "ஏண்டா, அந்தப் பணத்தை திருடுனியாமே?"

"அடப்போம்மா... உன்னால சோறு போச்சி. எனக்கு இப்ப பசிக்குதே என்ன பண்ணுவ, போ. நீயும் மூஞ்சியும் பாரு..."

"அட எச்சக்கல நாயே" - அம்மா விறகுக் கட்டையை எடுத்துக் கொண்டாள். அவன் ஓடுவதற்கு வழி பார்த்தும் கிடைக்காமல் போகவே....

"போம்மா.. நீயும் அடிக்கிறே. அங்க தான் அடிஅடின்னு அடிச்சாங்க. எனக்கு எப்படி வலிக்குது தெரியுமா..."

சட்டென்று விறகுக் கட்டையைக் கீழே போட்டுவிட்டு அவனை வாரி அணைத்துக் கொண்டாள். கண்களில் பொலபொலவென நீர் கொட்டியது. அவன் தலையைக் கோதிவிட்டாள்.

"இத பாருடா செல்லம்... அம்மாகிட்ட உண்மையச் சொல்லு. நீ பணத்தை எடுத்தியா... இல்லியா..."

கேட்டது அம்மா என்பதால், அன்பாய்க் கேட்டதால், அவனுக்குப் பிடித்திருந்தது.

"இல்லம்மா... நான் எடுக்கலேம்மா..."

ஒரு கணம் அம்மா அவனை உற்றுப் பார்த்தாள். அவன் முகத்தில் என்ன பார்த்தாளோ தெரியவில்லை.

"தெரியும்பா... நீ எடுக்கலை. நீ நான் பெத்த புள்ளடா. நீ எடுத்திருக்க மாட்டே...." கொஞ்சம் நிதானித்து "அப்புறம் ஏண்டா கண்ணா, நீ எடுத்ததா ஒத்துக்கிட்ட?"

"ம்... வந்து... அப்படி ஒத்துக்கினாக்கா... ரெண்டு செட்டு புது டிரெஸ் தரேன்னாங்கம்மா. அதான் ஒத்துக்கிட்டேன்" என்றவுடன், அம்மா படீரென உடைந்தாள். அவனை இன்னும் இறுக அணைத்தபடி "அய்யோ.. கடவுளே... எங்கள இன்னுமா உயிரோட வச்சிருக்க..." என சத்தமாய்க் கதறி அழுதாள். அவனுக்கும் அழுகை வந்தது.

அணைப்பில் இருந்தபடியே, கொஞ்சம் நேரம் கழித்து அமைதியானவுடன் அவன் அம்மாவிடம் கேட்டான்.

"ஏம்மா, எப்பம்மா புது டிரெஸ் தருவாங்க?"

"எதுக்குடா?"

"உண்மையை ஒத்துக்கிட்டேனே அதுக்கும்மா.." என்றான். ●

# ஈரமணல் வாசனை!

சிநேகமான அணைப்பு
அன்பான வார்த்தை
இதழ்கவ்வி நீ தரும்
அழுத்தமான ஆசை முத்தம்
உன்னிடமிருந்து ஒவ்வொன்றாய்
கால ஓட்டத்தில்
கரைந்து வரும் கணங்களிலும்
மழை பெய்து ஓய்ந்த
ஈரமணல் வாசனையாய்
ஓடிக் களைத்து வரும்
உன் வாசம் பிடிக்க
அலையுமென் மனதை
அன்பில் கிறங்கடிக்கத் தெரிந்தும்
நீ நமக்கான தருணங்களில்
அனிச்சை செயலாய் நடந்துகொண்டு
சிறுபிள்ளையாய் உறங்கிவிடும்
அந்த இரவுகளைக்கூட
உறக்கத்தை விலை கொடுத்து
ரசிக்கக் கற்றுக்கொண்டேன்!



சிவகாமிமுத்து

# அருள்வாக்கு

எப்போது பார்த்தாலும் குடிக்கணும், ஊதணும் என்று இருப்பதுபோல வெற்றிலை போட்டுக்கொள்வதும் ஒரு 'ஹாபிட்' ஆகி, அதற்கு அநேகம் பேர் 'அடிக்ட்' ஆகிறார்கள். இதனால் நாக்குத் தடித்து, பசி மந்தித்துப் போய்விடுகிறது. இப்படி விடக்கூடாது. பார்க்கவே பிடிக்காமல், வாய் நிறைய வெற்றிலைச் சாற்றை வைத்துக்கொண்டு பேசுவது, நம் மேலே அது தெறிப்பது, தங்கள் மேலேயே ஒழுகுவது என்றெல்லாம் பண்ணுவது கௌரவமும் இல்லை; ஆசாரமும் இல்லை. பொடியும் இப்படித்தான். போகிற இடமெல்லாம் (வெற்றிலை) துப்புவதும் (பொடி) சிந்துவதும் ஸிவிக் ஸென்ஸுக்கே விரோதம்.

அதனால்தான் பிரம்மச்சாரி, ஸந்நியாஸி இருவருக்கும் அது கூடாது என்று வைத்திருக்கிறது. லோக விவஹாரங்களைக் கவனிக்க வேண்டிய க்ருஹஸ்தர்களுக்கு ராஜஸ குணமும் இருக்க வேண்டுமென்றே தாம்பூல தாரணம் அநுமதித்திருக்கிறது. அதற்காக ராஜஸகுணம் மட்டுமே இருக்கும்படியாக ஓயாமல் தாம்பூல சர்வணம் பண்ணக்கூடாது. நல்ல பதார்த்தம், கெட்ட பதார்த்தம் எதுவானாலும் ஓயாமல் தின்னும் பழக்கமாகப் பண்ணிக் கொள்ளக்கூடாது. நம்மை நம் கண்ட்



# தாம்பூல தாரணம்!

தாம்பூலம் கொடுத்து உபசரிப்பதே மங்களம் என்று இருக்கிறது. பூஜையிலும் தாம்பூலம் அர்ப்பணம் பண்ண வேண்டும். அது ஸௌபாக்ய சின்னம்; அதோடு ஜீர்ணகாரி, ரத்த சுத்தி. சுண்ணாம்பில் கால்ஷிய ஸத்து இருக்கிறது. இத்தனையிருந்தாலும் அது ஸாத்விகம் இல்லை.

ரோலில் இல்லாமல் பண்ணித் தன்வசப்படுத்திக் கொள்வதாக எந்தப் பதார்த்தத்தையும் விட்டுவிடக் கூடாது.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

சமஸ்கிருதம் தெரியாவிட்டால்
வேதங்களை படிக்க முடியாது
என்ற கவலை இனி வேண்டாம்.
தமிழ் – ஆங்கில மொழிபெயர்ப்பில்
இப்போது வெளிவந்துவிட்டன

# நான்கு வேதங்கள்

தமிழ் : ம. ரா. ஜம்புநாதன் – ஆங்கிலம் : ஆர். டி. எச். கிரிஃபித்



ரிக் வேதம்
(3 – தொகுதிகள்)
பக். 2,552
ரூ. 1, 200 - 00

யஜுர் வேதம்
(1 – தொகுதி)
பக். 860
ரூ. 425 - 00





சாம வேதம்
(1 – தொகுதி)
பக். 632
ரூ. 325 - 00

அதர்வ வேதம்
(2 – தொகுதிகள்)
பக். 1,672
ரூ. 850 - 00



4 வேதங்கள் – 7 தொகுதிகள் : ரூ. 2,800/– (அஞ்சல் கட்டணம் உட்பட) சலுகை விலை ரூ. 2,400/– ஒவ்வொரு வேதத்தையும் அதன் விலையில் தனியாகவும் அஞ்சல் கட்டண சலுகையுடன் பெறலாம். பணம் அல்லது வங்கி வரைவோலை(D . D .) அலைகள் வெளியீட்டகம் **(ALAIGAL VELIYEETTAGAM)** என்ற பெயரில் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும். வி. பி. பி. இல்லை. அஞ்சல் கட்டண சலுகை தமிழ் நாடு மட்டும்.

## அலைகள் வெளியீட்டகம்

25, தெற்குச் சிவன் கோயில் தெரு, கோடம்பாக்கம்,
சென்னை– 600 024. தொலைபேசி : 044 –24815474.

# சேனல்

**மற்ற சேனல்களுக்குப் போட்டியாக விஜய் டி.வியிலும் ரயில் பெட்டிகள்போல புதிய சீரியல்கள் வரிசை கட்டுகின்றன. அதில் அமர்க்களமான ஆரம்பமும் கவனிக்க வைக்கும் விளம்பரங்களும் கிடைத்திருப்பது 'கண்ணாடிக் கதவு'களுக்குத்தான். இதில் ஆறு ஹீரோயின்கள். ஆறுபேரும் என்ன சொல்றாங்க?**

**கல்பனா (வினோதினி):** ஹலோ கல்கி ரீடர்ஸ்... வணக்கம். 'டெஸ்பரேட் ஹவுஸ் ஒயிஃப்'ங்கிற ஆங்கில சீரியலோட ரீமேக்தான் கண்ணாடிக் கதவுகள். கண்ணாடியில் முகம், உடல் எல்லாம் தெரியும். ஆனா மனசு தெரியாது. ஆனா மனசையும் கண்ணாடிபோல காண்பிக்கிற ஆறு பெண்களோட கதைதான் இது. சந்தேகப்படுற புருஷன்கிட்டேயிருந்து காப்பாத்திக்கிற கேரக்டர் எனக்கு. என்ன ஆனாலும் பாமாவோட தைரியமும் வீம்பும் யாருக்கும் வராதுப்பா!

**பாமா (பூஜா):** நான் படையப்பா நீலாம்பரி மாதிரி. நினைச்சதை அடையாம விடமாட்டேன். லவ் இஸ் ப்ளைண்ட் இல்லையா! நான் உயிருக்கு உயிரா காதலிச்சவர் திடீர்னு ராதாவைக் கல்யாணம் பண்ணிடுவாரு. ஆபீஸ்ல அவரோட பாஸ் நான். அதனால அலுவலக நேரத்துல அவரை என் இஷ்டத்துக்கு ஆட்டி வைப்பேன். அவர் பொண்டாட்டிகூட பேச விடமாட்டேன். ப்ச்... ராதா அக்காவைப் பார்த்தா கஷ்டமாத்தான் இருக்கு!

**ராதா (தேவதர்ஷினி):** என் கணவருக்கும் என் தோழிக்கு மிடையே உள்ள உறவு என்னைப் பாதிக்குது. என் தோழியை நம்பி கணவர் என்னைக் கை விட்டுடறாரு. அப்போ என் கதி? ஆனாலும் கீதாவை நினைக்கும்போது நான் பரவா யில்லையோன்னு தோணும்.

**கீதா (காயத்ரி):** நான் ஒரு டாக்டர். ஒரு குழந்தையைத் தத்தெடுத்திருப்பேன். பதினாலு வயசு வரைக்கும் சீராட்டி பாராட்டி வளர்த்தா, திடீர்னு ஒரு நாள் அந்தக் குழந்தையோட நிஜ அம்மா சொந்தம் கொண்டாட வருவாங்க. எப்படிச் சமாளிக்கிறோம்? அதுசரி, இந்த யாமினி நல்லவளா கெட்டவளா?

**யாமினி (லதாராவ்):** அதை நேயர்கள்தான் சொல்லணும். என்னுடையது நெகட்டிவ் கேரக் டர். ஒரு குடும்பத்தைப் பழி தீர்க் கறதுக்காக நான் ஒருத்தரை வேணும்னு காதல் பண்ணி பின்னாடி அவரைக் கொலை பண்ணிடுவேன். ஆனா நான் செஞ்சது தப்புன்னு பின்னாடி திருந்தற கேரக்டர். ஹும்... கவிதாவுக் குத்தான் நிறைய தைரியம் ஊட்டணும்.

**கவிதா (ப்ரசன்னா ரவி):** கல்யாணம் ஒரு பொண் ணோட வாழ்க்கையை எப்படி திசை திருப்பும்ங் கிறதுக்கு நானே உதார ணம்ங்க. கல்யாணத்துக்கு முன்னாடி நான் ஒரு கம்பெனியோட ஜி.எம்.

தேவதர்ஷினி


Natu
POWE
Beauty Soap
Presents
கண்ணா

எனக்குக் கிழே வேலைப் பார்த்தவரையே காதலிச்சு, கல்யாணமும் பண்ணிப்பேன். ஆனா என் கணவர் ஒரு ஈகோயிஸ்ட். நான் அவரைத் தாண்டி போயிடக் கூடாதுன்னு நாலு குழந்தைகளுக்கு என்னை அம்மாவாக்கி வீட்டுலேயே அடைச்சுடுவாரு.

**ஆறு பேரும் கோரஸாக :** எங்களையெல்லாம் நேர்ல பார்க்க ஆசையா? திங்கள் முதல் வியாழன் வரை இரவு எட்டு முப்பதுக்கு விஜய் டி.வியில 'கண்ணாடிக் கதவுகள்' வழியா பாருங்க. எங்களோட ஆட்டம், பாட்டம், சுக துக்கம் எல்லாத்துலேயும் பங்கெடுத்துக்கங்க.

**• சநகன்**

• பூஜா

• லதாராவ்

• வினோதினி

• காயத்ரி

# ணாடிப் பெண்கள்!

41



திங்கள்-வியாழன் - 8.30 pm




**வுகள்**

# அமரர் கல்கி






இராமசாமி, அரங்கசாமி, முனிசாமி, குமாரசாமி, கிருஷ்ணன், உஸ்மான், சுப்பராயன், ரங்கன், நான் ஆகியவர்கள் சிறு பையன்களாயிருந்த போது ஒரே சந்தின் மூலையில் ஒருங்குகூடி கோலி விளையாடியவர்கள். அக்காலத்தில் ஒருநாள், மேற்கண்டவாறு சத்தியம் செய்து கொடுத்துவிட்டு, ஒவ்வொருவருடைய மனோரதமும் இன்னதென்று வெளியிடலானோம். ஆ! அவற்றை இப்போது எண்ணிப் பார்க்கும்போது, எனது அருமை நண்பர்களில் ஒருவருடைய மனோரதமாவது நிறைவேறியிருப்பதை நான் காணவில்லை. என்னே இவ்வுலக வாழ்க்கை!

இத்தனைக்கும் பார்த்தால் எங்கள் மனோரதங்கள் அவ்வளவு கிடைக்கக்கூடாதவையாகத் தோன்றா. இராமசாமி ஆசைப்பட்டதெல்லாம் என்ன? 'காலேஜ் பியூன்' வேலைதான். டங், டங், டங் என்று மணியடித்துவிட்டு, பிள்ளைகள் - வாத்தியார்கள் எல்லாரும் அறைகளுக்குள் போனதும் தாழ்வாரத்தில் தூணில் சாய்ந்தபடி சிவனே என்று தூங்கவேண்டுமென்பதுதான் அவர் மனோரதமாயிருந்தது. இது நிறைவேறிற்றா? இல்லை. இந்த இன்பகரமான வாழ்க்கையை விட்டு, ஸர் ஸி.பி. இராமஸ்வாமி அய்யர் கே.சி.ஐ.இ. என்ற முழநீளப் பெயர்தாங்கி, வைஸ்ராய்களும், கவர்னர்களும், இராஜாக்களும், இராணிகளும் கூப்பிடும் இடத்துக்கெல்லாம் கையைக் கட்டிக்கொண்டு ஓடும்படியான கதிதான் அவர் தலையில் எழுதியிருந்தது. வாழ்க்கையின் கொடுமை அப்படி!

அரங்கசாமியின் மனோரதம் என்ன? அதுவும் பிரமாதமில்லை. சத்திர மணியக்காரர் உத்தியோகந்தான். இதாவது நிறைவேறிற்றா? எல்லா ஏற்பாடுகளும் நடந்து, கடைசியில் கிடைக்கலாம் என்ற நிலைமை ஏற்பட்ட சமயத்தில், திடீரென்று கைநழுவிப் போய்விட்டது. ஆசாபங்கமுற்ற நண்பர் அரங்கசாமி அய்யங்கார் கடைசியில் போயும் போயும் 'ஹிந்து' பத்திரிகை எடிட்டர் ஆக நேர்ந்தது.

முனிசாமியின் சமாசாரமென்ன? தாலுகா கச்சேரி டபேதார் ஆகவேண்டுமென்று அத்தியந்த ஆசைகொண்டு இராப்பகல் அதே சிந்தனையாயிருந்தார் பேர்வழி. அந்த ஆசை நிறைவேறவில்லை. வாழ்க்கையில் எத்தனையோ அவஸ்தைகள் பட்டு, கடைசியில் கேவலம் மந்திரி உத்தியோகம் பார்க்க நேர்ந்தது.

குமாரசாமி கிராம கணக்குப் பிள்ளையாக ஆசைப்பட்டார். கிடைக்கவில்லை. கடைசியாக, கல்வி மந்திரியாகத்தான் அவரால் முடிந்தது. நாமொன்று நினைக்க தெய்வமொன்று நினைக்குமென்பது பொய்யா?

கிருஷ்ணன் சொந்தத்தில் டீக்கடை ஒன்று வைத்து நடத்த வேண்டுமென்று விரும்பியிருந்தார். நடக்கவில்லை. திவான் வேலையும் அதுவும் இதுவும் பார்த்துத் திண்டாடித் தெருவில் நின்றுவிட்டு, கடைசியில் ஏழு வருஷமாய் லா மெம்பர் வேலையிலேயே உட்கார்ந்திருக்கிறார். ஆ! வாழ்க்கையில் இவருக்கு இருக்கக்கூடிய ஏமாற்றத்தை எண்ணும்போது எனக்குக் கண்ணீர் பெருகுகிறது.

நண்பர் உஸ்மான், வெற்றிலை வியாபாரம் பண்ண ஆசை கொண்டிருந்தார். அது கைகூடாமல், ஹோம் மெம்பர் ஸ்தானத்தில் அல்லாவின் அருளைத் தியானித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார்.

சுப்பராயனுடைய மனோரதம்

கடலைப் பிண்ணாக்கு வியாபாரத்தில் நின்றது; நடைபெறவில்லை. என்னவெல்லமோ பார்த்த பிறகு, இப்போது நிற்பதற்கு இடமின்றித் தவிக்கிறது.

ரங்கன் மனோரதம் என்ன? பழக்கடை வைத்து, பளபளவென்று கூரிய கத்தி வைத்துக் கொண்டு, ஒட்டு மாம்பழங்களை நைஸ், நைஸாக அறுத்துக் கொடுக்க வேண்டுமென்பது தான். அதற்குப் பதிலாக ஆசாமி மனிதர்களுடைய தேகங்களை அறுத்துத் தள்ளிக் கொண்டிருக்கிறார். "டாக்டர் ரங்காச்சாரி" என்றதும் குழந்தைகள்கூடப் பயப்படும்படியாக நிலைமைக்கு வர நேர்ந்து விட்டது. பாவம்!

நேயர்களே! மேலே நான் எழுதியிருக்கும் விஷயங்களின் உண்மையைப் பற்றி உங்களில் சிலருக்குச் சந்தேகம் தோன்றலாம். அதைத் தீர்த்துக் கொள்வதற்கு சுலபமான வழி ஒன்றிருக்கிறது. மேற்குறிப்பிட்ட கனவான்களில் யாராவது ஒருவரிடம் சென்று இந்தக் கட்டுரையை வாசித்துக் காட்டுங்கள். அவரிடமிருந்து நீங்கள் தப்பிப் பிழைத்து வந்தால், அப்புறம் பாக்கி விஷயம் பேசிக் கொள்ளலாம்.

104 டிக்ரி சுரம் அடித்துவிட்ட கையோடு இக்கட்டுரையை எழுதியிருக்கிறேன். இதில் சில பாகங்கள் ஒரு மாதிரி தகராறாய்த் தோன்றினால் சுர வேகத்தின் பலன் என்று நேயர்கள் அறிந்து கொள்க.

**- வானதி பதிப்பகத்தின் 'அதிர்ஷ்டக் கவசத்தி'லிருந்து...**






# போரிலிருந்து

பெரிய பெரிய ராட்சத கப்பல்களுக்கு நடுவே புதுப் பெண்ணைப் போல அலங்கரித்து நிற்கிறது நெதர்லாந்து நாட்டின் 'க்ரீன் பீஸ்' அமைப்பின் கப்பலான 'எஸ்பரன்ஸா.' கடந்த 16ஆம் தேதி சென்னைக்கு வந்த இந்தக் கப்பல், பார்த்த மாத்திரத்திலேயே தன் அழகாலும், கம்பீரத்தாலும் நம் மனதைக் கவர்ந்து விடுகிறது. 1984-ஆம் ஆண்டு போலந்து நாட்டில், ரஷ்ய இராணுவத்திற்காகத் தயாரிக்கப்பட்டது இந்தக் கப்பல். ரஷ்யாவின் பிரிவுக்குப் பின் கவனிப்பாரின்றி கைவிடபபட்டது. பிறகு இதை நெதர்லாந்தின் க்ரீன்பீஸ் அமைப்பு தத்தெடுத்துக் கொண்டது. 72.30 மீட்டர் நீளமும், 14.30 மீட்டர் அகலமும் கொண்ட இந்தக் கப்பலின் எடை சுமார் 621 டன். இது 423 டன் எடையைச் சுமக்கக் கூடியது. இந்தக் கப்பலில் 24 ஊழியர்கள் பணிபுரிகின்றனர். தவிர, ஒரு ஹெலிகாப்டரும், இரண்டு இயந்திரப் படகுகளும், படகை நீரில் ஏற்றவும், இறக்கவும் இரண்டு பெரிய கிரேன்களும், கடல் நீரைச் சுத்தம் செய்யும் டெப்ரி ஸ்வீப்பர் என்னும் ஒருவகைக் கருவியும் இதனுள் உள்ளன.

'எஸ்பரன்ஸா' என்றால் நம்பிக்கை என்று பொருளாம். ஆம்... இந்தக் கப்பல் க்ரீன்பீஸ் இயக்கத்தின் நம்பிக்கையாகத் திகழ்ந்து கொண்டிருக்கிறது. 2002-ஆம் ஆண்டு ரஷ்ய இராணுவத்திடமிருந்து வாங்கிப் புதுப்பிக்கப்பட்ட இந்தக் கப்பல், முதலில் திமிங்கல வேட்டையைத் தடுப்பதற்காகப் பயன்படுத்தப்பட்டு, தற்போது கடல் பாதுகாப்பு மற்றும் கடல் ஆராய்ச்சிக்காகவும், உலக சமாதானத்துக்காகவும் பயன்பட்டு வருகிறது. இந்தக் கப்பலின் சிறப்பம்சம் இதனுடைய வேகம்தான். 18 நாட்ஸ்.

மற்ற கப்பல்களைவிட நான்கு மடங்கு வேகமாகச் செல்லக்கூடியது. கடல் கொள்ளைக் கப்பல்களையும், திமிங்கல வேட்டை கப்பல்களையும் பிடிப்பதற்




காக இந்த வேகம் அமைக்கப்பட்டது என்று கப்பலின் கேப்டன் பிராங்கேம்ஃபு கூறுகிறார்.

சரி, இந்தக் கப்பலின் மூலம் க்ரீன்பீஸ் அமைப்பு என்ன செய்கிறது? க்ரீன்பீஸ் என்பது உலக அளவிலான ஒரு சுற்றுச்சூழல் பாதுகாப்பு இயக்கம். இந்தியா உட்பட நாற்பத்தொரு நாடுகளில் இயங்கி வரும் இந்த இயக்கம், 1980-ஆம் ஆண்டு நெதர்லாந்தில் சுற்றுச்சூழல் பாதுகாப்பு ஆர்வலர்களால் துவக்கி வைக்கப்பட்டது. தொடக்கத்தில் இவ்வியக்கம் அபூர்வ கடல் வாழ் உயிரினங்களின் பாதுகாப்பிற்கும், பிறகு கடலில் சேரும் அணுக் கழிவுகளைத் தடுத்து நிறுத்தவும் பாடுபட்டு, தற்போது சுற்றுச்சூழல் ஆராய்ச்சிக்கும், உலக சமாதானத்தை வலியுறுத்திப் பிரசாரம் செய்வதற்கும் பயன்பட்டு வருகிறது.

இத்தகைய பெருமைகளைக் கொண்ட க்ரீன்பீஸ் இயக்கம், தற்போது இந்தக் கப்பலை இந்தியாவிற்குக் கொண்டு வந்ததற்கும் நோக்கமுண்டு. ஆசியக் கண்டத்தில் அணு மற்றும் இரசாயனத் தொழிற்சாலைகள் நிறைய இயங்கி வருகின்றன. அவற்றிலிருந்து வெளியேறும் கழிவுகள் வங்காள விரிகுடாவிலும், இந்து மஹா சமுத்திரத்திலும் சென்று சேர்கின்றன. இதனால் நம் நாட்டின் சுற்றுச்சூழல் 0.3% பாதிக்கப்பட்டுள்ளது. இந்தப் பாதிப்பு மேற்கொண்டு வளராமல் தடுக்க என்ன செய்ய வேண்டும் என்பதை ஆராய்ச்சியின் மூலம் கண்டறிந்து, பிரசாரம் செய்ய வந்துள்ள இந்தக் கப்பலின் கடந்த வார முகாம் சென்னை.

அடுத்ததாக, இக்கப்பல் தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்குப் பயணம் மேற்கொள்ளவுள்ளது.

போருக்கென்று தயாரிக்கப்பட்ட கப்பல், இப்போது உலக நாடுகளில் சமாதானத்தைப் பரப்பி வருகிறது.

**- விமலன்**

# சமாதானத்துக்கு..

"சாப்பிட்டதும் உடனே தூங்கிடக் கூடாது!"

"மாட்டேன் டாக்டர். நாலஞ்சு கொட்டாவி விட்டுட்டுதான் தூங்குவேன்!"

- பம்மல் நாகராஜன்



# தாயே துணை!



"ஆட்சியில் பங்கு பிரச்னையை தலைவர் எப்படி சமாளிச்சார்?"

"வாஸ்துபடி நீங்க வெளியிலிருந்துதான் ஆதரவு கொடுக்கணும்னு சொல்லிட்டார்!"

- நெ.இராமன்

"உன் புருஷன் எழுதிய கடிதத்தை கடுகடு முகத்துடன் படிக்க ஆரம்பிக்கிறியே, ஏன்?"

"தலைப்பில் தாயே துணைன்னு எழுதித் தொலைச்சிருக்கார்!"

- உ.ராஜாஜி





"நான் ஃபெயில் ஆனதுக்குக் காரணம் வாத்தியார் சரியா சொல்லித் தராதது தான்!"

"நீ பிரின்ஸ்பால்கிட்டே ரிப்போர்ட் பண்றதுதானே?"

"செஞ்சேன்... எக்ஸாம் ஹால்ல அவ்வளவுதான் சொல்லித்தர முடியும்ங்கிறார்!"

- எச்.சுல்தானா

ஸ்ரீ ராமஜெயம்




# ஸ்ரீ மாருதி டிராவல்ஸ்

10/1, ராஜேஸ்வரி தெரு, பெரம்பூர், சென்னை — 600 011
தொலைபேசி எண் 25511786 மொபைல் : 9444035876
(நாம சங்கீர்த்தனத்துடன் ஆன்மீக அன்பர்களை அழைத்துச் செல்லும் சுற்றுலா குழு அமைப்பாளர்கள்)

① 07.09.06 முதல் 21.09.06 வரை 15 நாட்கள் கொண்ட பத்ரிநாத் மற்றும் கேதார்நாத் யாத்திரை. இரயில், பஸ், சாப்பாடு மற்றும் இரவு தங்குதல் உட்பட கட்டணம் ரூ. 6250/-

② 25.10.06 முதல் 29.10.06 வரை 5 நாட்கள் கொண்ட சாளக்கிராம (முக்திநாத்) நேபாள - பசுபதிநாத் யாத்திரை. சென்னையிலிருந்து காட்மாண்டு - டெல்லி வழியாக விமானம் மூலமாக சென்று சென்னை விமானம் வழியாக திரும்புதல் - சாளக்கிராம யாத்திரை - காட்மாண்டுவிலிருந்து ஹெலிகாப்டர் மூலமாக விமானம், ஹெலிகாப்டர், சாப்பாடு தங்குதல் உட்பட கட்டணம் ரூ. 36,500/- (பாஸ்போர்ட் அவசியம் தேவை)

③ நேபாள சாளக்கிராம யாத்திரை செல்பவர்கள் 29.10.06 அன்று டெல்லி வந்தடைந்து விருப்பமுள்ளவர்கள் கீழ்கண்ட காசி யாத்திரையில் கலந்து கொள்ளலாம். (உடன் கட்டணம் ரூ. 5,250/-)

④ 28.10.06 முதல் 08.11.06 வரை 12 நாட்கள் கொண்ட காசி, கயா, அயோத்தியா, அலகாபாத், நைமிசாரண்யம் யாத்திரை - காசி, கயா, திரிவேணி ஆகிய இடங்களில் பித்ரு காரியங்கள் தகுந்த புரோகிதர்களைக் கொண்டு சிரத்தையாக நடத்தி வைக்கப்படும். இரயில், பஸ், சாப்பாடு ஆகிய அனைத்தும் உட்பட கட்டணம் நபர் ஒருவருக்கு ரூ. 5,250/-

⑤ 15.11.06 முதல் 29.11.06 வரை 15 நாட்கள் கொண்ட பஞ்சதுவாரகை மற்றும் ஜெய்ப்பூர், புஷ்கர், சோம்நாத் ஆகிய யாத்திரை கட்டணம் ரூ. 6900/-

⑥ 22.01.07 - 15 நாட்கள் கொண்ட சப்த ஜோதிர்லிங்கங்கள், மற்றும் ஷீரடி, பண்டரிபுரம், கொல்லாப்பூர், மஹாலக்ஷ்மி, சனி சிங்கனாப்பூர்

பங்கு பெறுவீர்! பாக்கியவான்களாவீர்! மாருதி யாத்திரை பக்தியுடன் பகவத் அனுகிரஹத்தைப் பெறுவதற்கே. பிருந்த சௌகர்யத்திற்கும், வசதிக்கும் அல்ல.

**V.சீனிவாசன்**
(அமைப்பாளர்)

மேற்படி யாத்திரையின் கட்டணம் மற்றும் விவரம் அறிய சுய விலாசமிட்ட ரூ. 5/- ஸ்டாம்ப் கவருடன் விண்ணப்பிக்கவும்.

Visit our Website: www.srimaruthitravels.net
www.srimaruthitravels.com



# சிறுநீரகக் கல் கரையவும் உருவாகாமல் இருக்கவும்

பத்தியம் இல்லை!

# இயற்கை மூலிகை மருத்துவம்

பக்கவிளைவு இல்லை!



## சிறுநீரகக் கல் உருவாக காரணம்!

உடலில் சுத்திகரிப்பு பணியை செய்யும் இரசாயனத் தொழிற் சாலைதான் கிட்னி எனப்படும் சிறுநீரகம். உடல் நீரின் அளவு, உப்பளவு, அமிலம் மற்றும் காரத் தன்மையை சீராக வைக்க உதவுகிறது. உடலில் உள்ள கழிவுப் பொருட்களை சிறுநீர் மூலம் வெளியேற்றும் வேலையை சிறுநீரகங்கள்தான் செய்கின்றன. ஆகவே அடிக்கடி பரிசோதனை செய்து சிறுநீரகத்தின் செயல்பாடுகளை கவனிக்க வேண்டும்.

சிறுநீரகங்கள் சரியாக வேலை செய்யவில்லை என்றால், அதனால் வெளியேற்றப்பட வேண்டிய கழிவுகள், அங்கங்கே தேங்கி, உப்பு படிமங்களாக மாறி, அதுவே அதிகமாக சேரும்போது கற்களாக மாறி, போகப் போக சிறுநீர் பாதையையும் அடைத்துவிடும்.

**Dr. M.குருபரன் & Dr. M.சபாபதி S/o Dr. M.மாணிக்கவாசகம்**

# CKM தெய்வீக மூலிகை மையம்

தலைமை முகவரி : PB No.30, 1, திருநாத முதலி நகர் (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர், வேலூர்-635 601
✆ 04179-222769 செல் : 94441 61670, 94444 07638

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரின்ஸ் மேனர் பக்கத்தில்) கெல்லீஸ், சென்னை-600 010.
✆ 044-26424285, 26427638, செல் : 94440 01447

டாக்டரை முகாமில் நேரில் சந்திக்க ஒவ்வொரு மாதமும் 2ந் தேதி - வேலூர், காஞ்சிபுரம், 4ந் தேதி - கடலூர், விழுப்புரம், திருவண்ணாமலை, 7, 8ந் தேதி - மும்பை, 9ந் தேதி - பெங்களூர், 12ந் தேதி - சேலம், ஈரோடு, திருப்பூர், 13ந் தேதி - கோவை, உடுமலைபேட்டை, 14ந் தேதி - மதுரை, திருநெல்வேலி, 15ந் தேதி - விருதுநகர், தஞ்சாவூர், 16ந் தேதி - திருச்சி, கரூர், 20, 21ந் தேதி - புதுடெல்லி, 26ந் தேதி - சிதம்பரம்.

# அன்பெனும் மழையிலே...

இன்றைய இளைஞர்கள் பலர் காதலிக்கிறார்கள். தங்களுடைய காதலிகளுடன் சமயம் கிடைக்கும்போதெல்லாம் நேரத்தைச் செலவிடுகிறார்கள். அவர்களுடன் பேசுகிறார்கள். அன்பளிப்புகள் வாங்கித் தருகிறார்கள். அதே போல் காதலிகளும், தங்களுடைய காதலர்களிடம் தங்களது காதலை வெளிப்படுத்துகிறார்கள். இவை அனைத்தும் காதலனும், காதலியும் பரஸ்பரம் ஒருவர்மீது ஒருவர் கொண்ட அன்பின் வெளிப்பாடுகள். இதன் மூலமாக அவர்களுக்கு ஆனந்தம்தான் கிடைக்கிறதே ஒழிய, துளியும் சலிப்பு தோன்றுவதில்லை. மற்றவர்களுக்கு வேண்டுமானால் இவை நாடகங்களாகத் தோன்றலாம். காதலனோ, காதலியோ இத்தகைய செய்கைகளை நாடகம் என்று நினைக்கிறார்களா?

பக்தி என்பதும் இதுபோலத்தான். நாம், இறைவனுடன் கொண்டுள்ள பந்தத்தின் வெளிப்பாடுதான். நாம் பக்தியில் மூழ்கும், பிரார்த்தனையில் ஈடுபடும் ஒவ்வொரு நிமிடமும் ஆனந்தத்தை அனுபவிக்கிறோம். பிரார்த்தனை என்பது உள்ளத்துக்குள்ளே இறைவனுடன் நாம் நடத்துகிற உரையாடலாகும்.

பக்தி என்பது பிரார்த்தனையும், இறைவனின் புகழைப் போற்றிப் பாடுவதும்தான். இதனை எல்லா மதங்களிலும் காண முடியும். இஸ்லாமிய மதத்திலும் பிரார்த்தனையும், விழுந்து வணங்குவதும் உண்டு. அவர்கள்

17

மாதா அமிர்தானந்தமயி



மக்காவை மனத்தில் நினைத்து வணங்குகிறார்கள். கிறிஸ்தவர்கள் இயேசுவின் முன் மெழுகுவர்த்தியினை ஏற்றி ஜெபம் செய்கிறார்கள். ஜைன மதத்திலும், புத்த மதத்திலும் இந்து மதத்திலும் பிரார்த்தனை உண்டு.

அனைவரிடத்திலும் இறைவனைக் காண்பதும், அனைவரிடமும் மரியாதை காட்டுவதும்தான் உண்மையான பக்தி. அத்தகைய மனப் பக்குவத்தை நாம் பெற வேண்டும். அதற்காக நாம் நம்முடைய மனதைப் பண்படுத்த வேண்டும்.

ஒரு நோயாளிக்கு மருந்து வாங்குவதற்காக அவருடைய மகன் மருந்துக் கடைக்குச்

முழுவதும் பகவான்தான். எனவேதான், நான் உடல் அல்ல; மனம் அல்ல; புத்தி அல்ல என்று ஒவ்வொன்றாக விலக்கி விட்டு கடைசியில் நான்தான் கடவுள் என்று உணர்கிறான்.

நதியில் நீர் நிறைந்திருப்பதால்தான் அக்கரை, இக்கரை என்று இருக்கிறது. நதியில் நீர் வறண்டு போனால், எல்லாமே மணல் பரப்புதான். அது போலவே நான் வேறு; நீ வேறு, நான் வேறு; இறைவன் வேறு என்ற எண்ணமெல்லாம் மறைந்துவிட்டால் பிறகு எல்லாம் ஒன்றே! எல்லாம் பூரணமே!

பக்தியின் மூலமாக நாம் ஆகாயத்துக்கு



# கோயிலுக்குப் போனால் கஷ்டம் தீருமா?

சென்றான். மருந்தை வாங்கிக்கொண்டு வீட்டுக்குள் நுழைந்தபோது திடீரென்று மின்சாரம் போய்விட்டது. ஒரே இருட்டு. மகனால் எதையும் காண முடியவில்லை. மகன் வாயிற்படியினைத் தொட்டான். "இது இல்லை" என்று சொல்லியபடி இன்னும் சில அடிகள் வைத்து முன்னேறி கட்டிலை அடைந்தான். "இது அப்பா இல்லை" என்று சொல்லிக்கொண்டு இன்னும் நகர்ந்தான். கடைசியில் தன் அப்பாவைத் தொட்டான்; அவரது கையைக் கண்டுபிடித்தான். அதில் தான் வாங்கி வந்திருந்த மாத்திரைகளை வைத்தான்; தண்ணீர் கொடுத்தான். அப்பா மாத்திரை சாப்பிட்டார்.

இதுபோலவே, பகவானை அன்றி வேறு ஒன்றையும் அடைய பக்தனுக்கு ஆர்வமில்லை. அவனுக்குச் சிந்தனை

அப்பால் இருக்கும் இறைவனைத் தேடவில்லை. நாம் காண்கிற அனைத்திலும் இறைவனை தரிசிக்கிறோம். சமையல் அறையில் மாட்டப்பட்டிருக்கும் நூறு வாட்ஸ் பல்பு, நாளடைவில் அழுக்குப் படிந்து ஒளி மங்கி பூஜ்ஜியம் வாட் பல்பு போல ஒளி தரும். ஆனால், அந்த பல்பை எடுத்து நன்றாகத் துடைத்துவிட்டு மறுபடியும் மாட்டினால், பழையபடி பளீரென்று வெளிச்சம் தரும். நம்முடைய மனத்திலும் ஏராளமான அழுக்குகள் படிந்துள்ளன. அந்த அழுக்குகளை நீக்கும் செயலே சாதனை.

ஆலய தரிசனம் செய்தால் உங்களுக்கு மன நிம்மதி கிடைத்துவிடும் என்று நினைத்து விடாதீர்கள். "நாற்பது வருடங்களாக நான் விடாமல் கோயிலுக்குப் போய்க் கொண்டிருக்கிறேன்.

ஆனாலும் என்ன பிரயோஜனம்? என் கஷ்டங்கள் இன்னமும் தீரவில்லையே?" என்று சிலர் இறைவனைக் குறை கூறுவதுண்டு. ஆனால் இது ரொம்பவும் தவறான செயல். உங்கள் இதயம் தூய்மை அடையவில்லை என்றால், நீங்கள் என்ன செய்தாலும் அதனால் ஒரு பலனும் விளையாது.

ஆசிரமத்துக்கு அம்மாவை தரிசனம் செய்ய வருகிறவர்கள் பலர் அங்கே வீட்டுக்குச் சென்று செய்ய வேண்டிய வேலைகள் குறித்தும், ஆபீசில் ஈடுபட வேண்டும். இறைவன் நாமத்தை ஜெபிக்க வேண்டும். அப்போதுதான் பலன் கிடைக்கும்.

திருப்பதிக்கோ, காசிக்கோ செல்வதனால் மட்டும் முக்தி கிடைத்து விடாது. அங்கு சென்று குளித்து, தெய்வ வழிபாடு செய்வதால் மட்டும் பலனில்லை. திருப்பதிக்குச் சென்றால் முக்தி கிட்டும் என்றால், அங்கே வியாபாரம் செய்கிற எல்லாருக்கும் முக்தி கிடைக்க வேண்டுமல்லவா? கொலை, கொள்ளையில் ஈடுபட்டுக்

# அம்மா!

அம்மாவுடன் தங்கி இருந்த பிரம்மச்சாரிகள் எண்ணிக்கையும், அம்மாவின் தரிசனத்துக்காக வரும் பக்தர்களின் எண்ணிக்கையும் நாளுக்கு நாள் பெருகிக் கொண்டே வந்தன. ஆசிரமம் என்று பக்தர்களால் குறிப்பிடப் பட்ட அம்மாவின் இருப்பிடத்தை முறையான ஆசிரமமாக அமைத்துச் சட்டப்படி பதிவு செய்தால் நிலைமை சீராகும் என்ற எண்ணம் பக்தர்களுக்கும், பிரம்மச்சாரிகளுக்கும் ஏற்பட்டது. ஆனால், அம்மாவுக்கு இதில் முழுச் சம்மதமில்லை. "ஆசிரமமும் ஒரு பந்தம் தானே?" என்றார்.

மீண்டும், மீண்டும் அவர்களது வற்புறுத்தல் காரணமாக அம்மா சம்மதம் தெரிவித்தார். அம்மாவின் அயல்நாட்டு பக்தர்கள், சட்டப்படி அம்மாவுடன் தங்கி இருப்பதற்கு ஆசிரமம் என்ற சட்ட ரீதியிலான ஓர் அமைப்பு அவசியம் என்று உணரப்பட்டது. இப்படியாக, 1981ஆம் ஆண்டு மே மாதம் ஆறாம் தேதி திருவாங்கூர் - கொச்சி மாநில அறநிலையச் சட்டப்படி மாதா அமிர்தானந்த மயி மிஷன் கொல்லத்தில் பதிவு செய்யப்பட்டது. அம்மாவின் லட்சியங்களையும், உபதேசங்களையும் பாதுகாத்துப் பொது மக்களிடையே பரப்புவது அதன் நோக்கமாகும். இந்த தருணத்தில்தான் சுதாமணி என்ற இயற்பெயர் கொண்ட அம்மாவுக்கு, அம்மாவின் சீடர் ஒருவராலேயே 'மாதா அமிர்தானந்தமயி' என்ற புதிய நாமம் தேர்ந்தெடுத்துச் சூட்டப்பட்டது.

\- மௌலி

செய்த வேலைகள் குறித்தும், வேறு பல சிந்தனைகளிலும் ஈடுபட்டிருந்தால் ஒரு பலனும் கிடைக்காது. கோயிலுக்குப் போனாலும், ஆசிரமத்துக்கு வந்தாலும் முழுமையான இறை சிந்தனையில் கொண்டு காசியில் வசிப்பவருக்கு எப்படி முக்தி கிடைக்கும்? இதயத்தில் தூய்மை அவசியம். அதுவே முக்திக்கு வழி.

(அன்பு பெருகும்)



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.

கிளை நிறுவனம் : புதிய எண். 16, பழைய எண். 19, முதல் மாடி, 30வது தெரு,
தில்லைகங்கா நகர், நங்கநல்லூர், சென்னை – 600 061. போன் : 22333214

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 18 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை **ஸ்ரீ சாரதா சக்தி பீடம்** என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்

## சிறுகதை



# கண் பேசும்

ஊட்டி, செர்ரி கிராஸிலிருந்த அந்த ஹோட்டல் அறையின் ஜன்னலோரம் நின்றபடி, வெளியே பெய்து கொண்டிருந்த மழையை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன்.

"என்னங்க இப்படி குளிருது..." என்று என் மனைவி நந்தினி கூற, திரும்பி அவளை நோக்கி, "இப்பதானே மழை பெய்ய ஆரம்பிச்சிருக்கு. இனிமே குளிர் குறைஞ்சுடும். குளிர் தெரியாம இருக்க, ஒரு சுலபமான வழி இருக்கு" என்று நந்தினியின் இடுப்பைப் பிடித்து, வளைத்து என்னருகே இழுக்க... "அய்யோ... என்னங்க இது..." என்றபடி என்மீது ஒட்டிக் கொண்டாள். "நிவேதா பாத்ரூம்லருந்து வந்துடுவா. வேண்டாங்க" என்றாள்.

"பிரம்மராஜன் கவிதை ஒண்ணு கேள்விப்பட்டிருக்கியா?"

"என்ன கவிதை?"

"வேண்டாம், வேண்டாம் என்றாள். இவளா வேண்டாம் என்றாள்."

"ம்... அப்புறம்."

"அவ்ளோதான்."

"அவ்ளோ தானா..." என்று யோசித்த நந்தினி அர்த்தம் புரிந்து, "உங்கள..." என்று செல்லமாக என் கழுத்தை நெரித்தவள், "அம்மா..." என்று அழைத்தபடி பாத்ரூமிலிருந்து வெளியே வந்த என் ஐந்து வயது மகள் நிவேதாவைப் பார்த்ததும், பதறிப்போய் விலகினாள். "சொன்னா கேக்குறீங்களா?" என்று முணுமுணுத்தாள்.

"என்ன பண்ணிகிட்டிருக்கீங்க?" என்றாள் நிவேதா - எங்களைச் சந்தேகத்துடன் பார்த்தபடி.

"ஒண்ணுமில்ல நிவேதா. அம்மா கண்ணுல தூசி விழுந்துடுச்சு. எடுத்து விட்டுக்கிட்டிருந்தேன்."

"எப்ப பாத்தாலும் அம்மா கண்ணுல தூசி எடுத்துக்கிட்டே இருங்க" என்ற நிவேதாவைப் பிடித்து இழுத்த நந்தினி, "கேள்வியெல்லாம் அப்புறம் கேட்கலாம். முதல்ல ஸ்வெட்டரைப் போட்டுக்கோ" என்று ஸ்வெட்டரை மாட்டிவிட்டாள்.

ஸ்வெட்டரைப் போட்டவுடனேயே, வேகமாக அறைக்கு வெளியே ஓடினாள் நிவேதா. "ஏய்... நில்லுடி..." என்றபடி நிவேதாவைத் துரத்திக்கொண்டு போனாள் நந்தினி. ஐந்து நிமிடங்களான பிறகும் இருவரும் திரும்பவில்லை. மணி பார்த்தேன்; எட்டு. இப்போது மழை நின்று, வெயிலடிக்க ஆரம்பித்திருந்தது. சிகரெட் பிடிக்க வேண்டும்போலத் தோன்றியது. கைவசம் சிகரெட் இல்லை. சட்டையை மாட்டிக் கொண்டு வெளியே வந்து, அறைக்கதவைச் சாத்திய பொழுதுதான் கவனித்தேன்.

வராண்டா முடிந்து, படிகள் திரும்புமிடத்திலிருந்த ஜன்னல் வழியாகப் பார்த்தபடி, யாரோ ஒரு பெண்ணுடன் பேசிக் கொண்டிருந்தாள் நந்தினி. நிவேதா கீழே அமர்ந்து, இன்னொரு பெண் குழந்தையுடன் விளையாடிக் கொண்டிருந்தாள். அருகிலிருந்த சோஃபாவில் ஒருவன் பேப்பர் படித்தபடி அமர்ந்திருந்தான். என் வயது இருக்கும்.

யோசனையுடன் நந்தினியை நெருங்கி, "நந்தினி..." என்று நான் அழைத்தவுடன், நந்தினியின் அருகிலிருந்த அந்தப் பெண்ணும் திரும்ப, நான் அதிர்ந்து போனேன். அது... என் முன்னாள் காதலி சுமித்ரா! நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது. என்னைப் பார்த்தவுடன், ஒரே ஒரு வினாடி சந்தோஷத்துடன் ஒளிர்ந்த சுமித்ராவின் கண்கள், உடனே இருண்டன. சட்டென்று முன்பின் தெரியாதவரைப் போல் முகத்தை வைத்துக்

ஜி.ஆர்.சுரேந்தர்நாத்

கொண்டாள்.

"இவங்க பேரு சுமித்ரா. நமக்கு எதிர் ரூம்லதான் இருக்காங்க. இவரு... இவங்க ஹஸ்பெண்ட்...'' என்று நந்தினி அறிமுகப்படுத்தி வைக்க, நான் சுமித்ராவின் கணவனை நோக்கித் தடுமாற்றத்துடன், "ஹலோ..." என்றேன்.

"ஹலோ...'' என்றான் அவன். ''இவங்களும் மெட்ராஸ்தான்'' என்று நந்தினி கூற, எனக்கு வேகமாக அந்த இடத்தை விட்டு நகர வேண்டும் போலத் தோன்றியது.

"அப்படியா... சரி... நான் கீழ போய்ட்டு வந்துடுறேன்" என்று வேக, வேகமாகப் படிக்கட்டுகளில் இறங்கினேன்.

ஹோட்டலுக்கு எதிரிலிருந்த பெட்டிக் கடைக்குச் சென்று, அவசர அவசரமாக ஒரு சிகரெட்டை வாங்கிப் பற்றவைத்துக் கொண்டேன். இரண்டு முறை நன்கு இழுத்து, புகையை வெளியே விட்டவுடன், பதற்றம் லேசாகத் தணிந்தது.



"சுமித்ரா ஒரு காதல் பிசாசு!"

# வார்த்தைகள்!

சுமித்ரா... என் வாழ்க்கையின் அதிகபட்ச சந்தோஷத்தையும், அதிகபட்ச வேதனையையும் தந்தவள். எனக்கு சென்னையில் வேலை கிடைத்து, பிரம்மச்சாரியாக ஒரு வீட்டின் மாடியறையில் தங்கியிருந்தேன். பக்கத்து வீட்டு வக்கீல் பெண் சுமித்ரா. மொட்டை மாடியில் துணி காயபோட வந்தபொழுது பார்த்து, சிரித்து... ஆறே மாதங்களில் அது காதலாகி, பார்க்கில் தனியாகச் சந்திக்குமளவிற்கு வளர்ந்தது. ஊரை மறந்து, உறவுகளை மறந்து, பேச்சும் சிரிப்புமாய்க் கழிந்த அந்த நாட்கள்...

**பா**ர்க்கின் கும்பலில்லாத மூலையிலிருந்த வேப்பமரத்தடியில் அமர்ந்திருந்தோம். "சுமி.. நியூஸ் பேப்பர்ல போடுற ஜோசியத்துல உனக்கு நம்பிக்கையிருக்கா?" என்றேன்.

"ம்... தினம் பார்ப்பேன். மூக்காவாசி பலிச்சிடும்'' என்றாள் சுமித்ரா.

"இன்னைக்கு பேப்பர்ல என் ராசிக்கு, கன்னிப்பெண் முத்தம் தேடிவரும்னு போட்டிருக்கான்" என்றபடி நெருக்கமாக அமர்ந்தேன்.

''என் ராசிக்கு, ஆண்களிடம் எச்சரிக்கையாக இருக்கவும்னு போட்டிருக்கான்" என்று சிரித்துக் கொண்டே தள்ளி அமர்ந்தாள்.

"உங்க கட்சிப் பிரமுகர்களின் இன்சூரன்ஸ் பேப்பர்களையெல்லாம் இங்கே ஏன் கொண்டு வந்திருக்கீங்க?"

"எங்க கட்சியில யாருக்கும் பாலிஸி கிடையாதுன்னு உங்க பத்திரிகையில எழுதினீங்களாமே?"

- என்.கே.கண்ணன்

"சை... லவ் பண்ணி ஆறு மாசமாவுது. இன்னும் ஆறு தடவை கூட நீ முத்தம் தரல. நீ கொஞ்சம் லேசுபாசா விட்டுக் கொடுத்து நடந்துக்கிட்டீன்னா, நான் ஏன் பரங்கிமலை ஜோதிக்கெல்லாம்..." என்ற நான் நாக்கைக் கடித்துப் பேச்சை நிறுத்தினேன்.

"ஏய்... என்ன சொன்ன? சொல்லு... சொல்லு..."

"ஒண்ணுமில்ல சுமி."

"இல்ல... நீ பொய் சொல்ற... பரங்கி மலைல ஜோதின்னு ஒரு பொண்ணு கூட..." என்ற சுமித்ராவின் கண்கள் கலங்கிவிட்டன.

"அய்யோ.. அது பொண்ணு இல்லடி... தியேட்டர்."

"சை... தியேட்டரா? நான் பயந்தே போயிட்டேன். இரு. இரு.. அந்தத் தியேட்டர்ல தப்பான மலையாளப் படங்கள் தானே போடுவாங்க. நான் பேப்பர்ல பாத்துருக்கேன்."

"சேச்சே... மலையாள ஆர்ட் ஃபிலிம்டி... பெண்களோட உணர்வுகள எவ்வளவு யதார்த்தமா சொல்லியிருப்பாங்க தெரியுமா?"

"என்ன யதார்த்தமா...."

"ஒரு படம் பாத்தேன். ஒரு வயசான ஜமீன்தாருக்கு ரெண்டாம்தாரமா வாழ்க்கைப்பட்ட பொண்ணோட மன உணர்வுகள ரொம்பப் பிரமாதமா வெளிப்படுத்துவாங்க தெரியுமா?" என்று நான் கூற,

"ரொம்பப் பிரமாதமா!" என்று நக்கலாகக் கேட்டு சத்தமாகச் சிரித்தாள் சுமித்ரா. சுமித்ரா எப்போதும் மிகவும் சத்தமாக, சினிமாக்களில் பேய், பிசாசு சிரிப்பது போல் சிரிப்பாள். காதல் பிசாசு.

"பொழுதுபோன நேரத்துல, வேப்ப மரத்தடில உக்காந்துக்கிட்டு இப்படில்லாம் சிரிக்காத சுமி, எனக்கு உடம்பெல்லாம் வெடவெடங்குது..." என்று நான் உடல் நடுங்கக் கூற, சுமித்ரா மேலும் சத்தமாகச் சிரிப்பாள். "அய்யோ... மோகினிப் பிசாசு சிரிக்குது. எடுறா வேப்பிலைய..." என்று கூற, மோகினிப் பிசாசு மேலும் சிரிக்கும்.

புன்னகையுடன் சிகரெட்டைக் கீழே போட்டு அணைத்தேன். ஹோட்டலை நோக்கி நடந்தேன்.

நான் படியேறி வந்தபொழுது, இன்னும் நந்தினியும், சுமித்ராவும் பேசிக் கொண்டிருந்தனர். என்னைக் கவனித்தவுடன், சுமித்ரா பேச்சை நிறுத்தினாள். ஒரே ஒரு வினாடி மட்டுமே என்னைப் பார்த்தாள். ஏழு வருடங்களுக்கு முந்தைய அந்தக் காதல்.. பிரிவுத் துயரம்... மீண்டும் சந்தித்ததில் ஏற்பட்ட சந்தோஷமும் துக்கமும் கலந்த உணர்ச்சிகள்... என்று அத்தனையையும் ஒரே பார்வையில் காண்பிக்க சுமித்ராவால் மட்டுமே முடியும்.

நந்தினி, "என்னங்க.. ஹோட்டல்லயே வேன் வச்சு தொட்டபெட்டா, பைகாரான்னு எல்லா இடத்துக்கும் அழைச்சுட்டுப் போவாங்களாம். நாலஞ்சு ஃபேமிலி போலாமாம். இவங்க அதுல தான் போறாங்களாம். நாமளும் அதுலயே போயிடலாமா?" என்றாள்.

"சரி..." என்ற நான் சுமித்ராவின் மகளைப் பார்த்து, "இங்க வா.." என்று கூற, அந்தக் குழந்தை ஓடி வந்து, என் கையைப் பிடித்துக் கொண்டது. குழந்தையின் பிஞ்சு விரல்களைப் பிடித்தபடி, அறையை நோக்கி நடந்தேன்.

அறைக்குள் நுழைந்தவுடன், "உன் பேர் என்ன?" என்றேன்.

"சைதன்யா..." என்று தரையைப் பார்த்தபடி கூறினாள். நான் முதன்முதலாக சுமித்ராவின் பெயரைக் கேட்டபொழுதுகூட, அவளும் இப்படித் தரையைப் பார்த்துக் கொண்டு தான் பதில் கூறினாள்.

"என்ன படிக்குற?"

"யு.கே.ஜி...." என்று நிமிர்ந்து அவள் கூறிய பொழுதுதான், அந்தக் கண்களைக்

கவனித்தேன். அப்படியே சுமித்ராவிற்கு இருப்பதைப் போன்ற அகலமான கண்கள். முகமும் சுமித்ராவின் ஜாடைதான்.

"உனக்கு அம்மா பிடிக்குமா, அப்பா பிடிக்குமா?"

"அம்மாதான் பிடிக்கும்."

'எனக்கும், ஒரு காலத்துல உங்கம் மான்னா ரொம்பப் பிடிக்கும்' என்று மனதிற்குள் கூறிக்கொண்டிருந்த பொழுதே, "சைதன்யா..." என்று சுமித்ரா அழைக்க... எழுந்து ஓடினாள் சைதன்யா.

சுமித்ரா, சைதன்யாவின் கையைப் பிடித்துக்கொண்டு திரும்பியபொழுது, லேசாக... மிக லேசாக... நான் மட்டுமே அறியுமாறு, ஓர் ஓரப்பார்வையை வீசி விட்டுச் செல்ல... அந்த ஒற்றைப் பார்வை, உயிர் வரை ஊடுருவியது போல் இருந்தது.

**வே**ன் புறப்பட்டது. சுமித்ராவின் கணவர், முன்பக்கம் டிரைவர் சீட்டருகில் அமர்ந்து கொண்டார்.

நானும், எனது மகளும், சுமித்ராவின் மகளும் ஓர் இரட்டை இருக்கையில் அமர்ந்து கொள்ள, எதிரே எங்களைப் பார்த்தாற்போல் இருந்த இரட்டை இருக்கையில் நந்தினியும், சுமித்ராவும் அமர்ந்திருந்தனர். நானும், சுமித்ராவும் எதிரெதிரே ஜன்னலோரம் அமர்ந்திருந்தோம்.

ஊட்டிக்கே உரிய இயல்பாக, எந்த அறிகுறியுமின்றி, திடீரென்று மழை தூற ஆரம்பித்தது. அனைவரும் வேக, வேகமாக ஜன்னல் கதவுகளைச் சாத்தினர். நானும், சுமித்ராவும் மட்டும் சாத்தவில்லை.

"ஜன்னலைச் சாத்தலையா?" என்றாள் நந்தினி.

"இருக்கட்டும்" என்றாள் சுமித்ரா.

"நீங்களும் மழை பைத்தியமா?"

"ஏன் கேட்குறீங்க?"

"என் வீட்டுக்காரரும் மழை பைத்தியம். மழை பெஞ்சா... அவரு ஃப்ரண்ட் ஒருத்தர், ஒரு கேஸட் கொடுத்தாராம். இளையராஜா மியூசிக். அது என்ன பேருங்க?" என்றாள் நந்தினி என்னை நோக்கி.

"நத்திங் பட் விண்ட்" என்றேன். அது சுமித்ரா கொடுத்த பரிசுதான்.

"ம்... அதைப் போட்டுக்கிட்டு, ஜன்னலோரமாப் போய் நின்னுக்குவாரு" என்று நந்தினி பேசிக் கொண்டிருக்கும்போதே சுமித்ரா ஓரக் கண்ணால் என்னையே பார்த்தாள். அவள் கண்கள் கலங்கி விட்டன.

சட்டென்று ஜன்னல்பக்கம் திரும்பி, கைக்குட்டையால் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

எனக்கும் கண்கள் பனிக்க, மனம் பழைய நினைவில் ஆழ்ந்தது.

**அ**துவும் இது போன்றதொரு மழைக் காலம். சுமித்ராவின் வீட்டில், எல்லோரும் ஒரு திருமணத்திற்காக தாம்பரம் போயிருந்தார்கள். சுமித்ரா மட்டும் வீட்டில் தனியாக இருந்தாள்.

நான் 'நத்திங் பட் விண்ட்' பாட்டைப் போட்டுவிட்டு, ஜன்னல் கம்பிகளில் என் இரண்டு கைகளையும் வைத்துக் கொண்டு மழைச் சாரலில் நனைந்து கொண்டிருந்தேன்.

திடீரென்று கொலுசுச் சத்தம் கேட்டது. சுமித்ராதான். நான் திரும்ப முற்பட, "திரும்பாத..." என்று என் காதில் கிசுகிசுப்பாகக் கூறிய சுமித்ரா, ஜன்னலில் வைத்திருந்த எனது இரண்டு விரல்கள் மீதும், தனது கரங்களைக் கோத்துக் இறுக்கிக் கொண்டாள். மழைநீர் சுமித்ராவின் கைகளில் வழிந்து, வளையல்களை கடந்து, முழங்கையை அடைந்து, கீழே கொட்டியது.

நான் வேண்டுமென்றே, "ஈரத்தரை வழுக்குது. இறுக்கிப் பிடி..." என்றேன்.

"சீ போடா.... பொறுக்கி.." என்று



''நம்ம பயலைக் கடத்தினவன் அவனை விட ஒரு லட்சத்து இரண்டா யிரம் ரூபாய் கேட்கிறானா... நேற்று ஒரு லட்சம் ரூபாய்தானே கேட்டான்?''

''ஒரே நாளில் நம்ம பயல் ரெண்டாயிரம் ரூபாய்க்கு சாக்லெட் தின்னு தொலைச்சிருக்கான்!''

- உ.ராஜாஜி

அவன் என் கழுத்தில் கடித்தது வலிக்கவே இல்லை. திரும்பி, அவளைப் பார்த்து, "காலையிலிருந்து க்ளவ்டியா இருந்துச்சா? ஊட்டில இருக்குற மாதிரி ஒரு ஃபீலிங். நம்ம ஹனிமூனுக்கு ஊட்டி போகணும். என்ன சொல்ற?" என்றேன்.

''ஆமாம். ஊட்டிதான்...'' என்று சுமித்ரா தொடர்ந்து கூறிய வார்த்தை களை, எனது உதடுகள் உள்வாங்கிக் கொண்டன.

ஊட்டிக்குத்தான் வந்திருக்கிறோம். நான், எனது மனைவியுடனும், சுமித்ரா, அவள் கணவனுடனும்.

விதியை வெல்ல யாரால் முடியும்? சுமித்ராவின் பெற்றோருக்கு எங்கள் காதல் விஷயம் தெரிய வந்து. ஜாதி, அந்தஸ்து வேறுபாட்டைக் காரணம் காட்டி எதிர்த்தனர். சுமித்ராவும் நிறைய இந்தியப் பெண்கள் போல், கண்ணீருடன் எங்கள் காதலை முறித்துக் கொண்டாள். நானும் வேறு அறை பார்த்துக்கொண்டு சென்றுவிட... அதற்குப் பிறகு இப்போது தான் நான் அவளைப் பார்க்கிறேன்.

தொட்டபெட்டா, ரோஸ் பார்க்... என்று பல இடங்களைப் பார்த்துவிட்டு, மாலை ஆறு மணிக்கு மேல் ஹோட்ட லுக்குத் திரும்பினோம். சென்ற இடங்களி



ளெல்லாம் நந்தினியும், சுமித்ராவும் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். ஏனோ தெரியவில்லை. நானே சுமித்ரா விடம் பேசியது போல் ஒரு மனநிறைவு.

திரும்பும்பொழுதுதான் நந்தினி கூறினாள். ''அவங்க ஈவ்னிங்கே கிளம் பறாங்களாம். நாளைக்கு கோயம்புத் தூர்ல ஒரு கல்யாணமாம். மெயினா அதுக்குத்தான் வந்தாங்களாம். சரி... அப் படியே ஊட்டிக்குப் போய்ட்டு வந்துட லாம்னு வந்தாங்களாம்."

"அப்படியா?'' என்றேன் ஏமாற்றத் துடன்.

அவர்கள் சூட்கேஸுடன் எங்கள் அறைக்கு வந்து விடைபெற்றுக் கொண்டனர். "நீங்க இருந்தது, நல்ல கம்பெனியா இருந்துச்சு'' என்றாள் நந்தினி. அப்போது சுமித்ரா லேசாக விழி களை உயர்த்தி, என்னை நோக்கினாள்.

"சரி... நாங்க கிளம்பறோம்" என்று சுமித்ராவின் கணவர் கூறிய தருணத்தில், ''அப்பா... ஷூ அவுந்துடுச்சுப்பா'' என்றாள் சுமித்ராவின் மகள் சைதன்யா. அவர் குனிந்து சைதன்யாவின் ஷூவைச் சரி செய்துகொண்டிருந்த சமயத்தில், எனது மகள் வராண்டாவுக்கு ஓட, "ஏய்..." என்று துரத்திக்கொண்டு சென்றாள் நந்தினி. ஏதோ ஓர் அறையிலிருந்து, 'உயிரே...' திரைப்படப் பாடல் ஒலித்தது.

"வானம் எங்கும் உன் பிம்பம்
ஆனால் கையில் சேரவில்லை..."

என்ற வைரமுத்துவின் வரிகள் காற்று வெளியை நிரப்பிக்கொண்டிருக்க... சுமித்ராவின் அகன்ற விழிகளில், கண் ணீர் ஒரு மெல்லிய படலம்போல் படர்ந் திருக்க... "வரட்டுமா?" என்பதுபோல் அவள் லேசாகத் தலையை அசைத்துக் கேட்க, நான் உதடுகளை மடித்துத் துக்கத்தை அடக்கியபடி, "போய் வா" என்பதுபோல் தலையை ஆட்டினேன்.

"சரி சார்... பை..." என்று சுமித்ராவின் கணவர் எழுந்து செல்ல, திரும்பி என் னைப் பார்த்தபடியே நடந்தாள் சுமித்ரா.

அப்போதுதான், நாங்கள் ஒரு வார்த்தைகூட பேசிக் கொள்ளவில்லை என்பது ஞாபகத்திற்கு வந்தது. ஆனாலும் நிறைய பேசிவிட்டோம். ●

## கேத் வின்ஸ்லெட்டுக்கு சிலை திறக்கப்பட்டது

சென்னை, ஜூலை 22. சென்னை காமராஜர் சாலையில் கண்ணகி சிலை அருகே அமைக்கப்பட்ட கேத் வின்ஸ்லெட் சிலையை முதல்வர் கருணாநிதி நேற்று திறந்து வைத்தார்.

டைட்டானிக் திரைப்படத்தில் கதாநாயகியாக நடித்ததன் மூலம் உலகப் புகழ் பெற்றவர் நடிகை கேத் வின்ஸ்லெட். உலகில் இலங்கை, க்யூபா, குரோசியா உட்பட 24 நாடுகளில் அவருக்குச் சிலை திறக்கப்பட்டுள்ளது. இந்தியாவிலும் அவருக்குச் சிலை வைத்த பெருமையை நேற்று தமிழகம் பெற்றுக்கொண்டது.

விழாவில் முதல்வர் கருணாநிதி பேசியதாவது : உலகத் தமிழர்களின் கடமை மட்டுமல்ல, இந்த நாடு யாருக்கு நன்றி கூற வேண்டுமோ அவருக்கு அந்த நன்றிக் கடனை வட்டியோடு அடைக்க, இந்த விழா தேவையென்று கருதினேன். கப்பலே மூழ்கினாலும் கடலிலே மிதந்து காதலின் புனிதத்தைக் காப்பாற்றினாளே செல்வி கேத் வின்ஸ்லெட், அவளுக்கு ஒரு சிலை அமைப்பது திரையுலக மூதாதையர்களின் தலைவனாகிய என் பொறுப்பு என நினைத்தேன்.

இந்தப் பொறுப்பை நிறைவேற்ற முடியாத அளவுக்குப் பல தடைகள் ஏற்பட்டு மனச் சூறாவளி வீசியது. நீதிமன்றம் பல விசித்திரமான வழக்குகளைச் சந்தித்திருக்கிறது. கடற்கரையில் வைப்பதால், சாலையில் இருந்து பார்க்கும்போது சிலை கடலை மறைக்கிறது என நீதிமன்றத்தில் வழக்கு தொடர்ந்தனர். அதுவரை வராத எதிர்ப்பு சொல்லிக் கொள்ளாமல் சுனாமி போல் சுழண்டு வந்தது. என்ன செய்யப் போகிறான் இந்த கருணாநிதி எனச் சிலர் எள்ளலோடும் ஏளனத்தோடும் பார்த்தனர். என மனச் சிறையிலிருந்து எந்தவித உணர்ச்சியையும் வெளியே விடாமல் மௌனம் காத்தேன். தர்மம் மீண்டும் ஜெயித்திருக்கிறது.

இவ்வாறு கருணாநிதி கூறினார்.

விழாவில் கலந்துகொண்ட கேத் வின்ஸ்லெட்டின் ஒன்றுவிட்ட சித்தப்பா ரஜினிகாந்த் பேசியதாவது :

இது ஒரு நடிகைக்கு வைக்கப்பட்ட சிலை அல்ல. கடலையே தன் காதலால் அழவைத்த காவியத் தலைவிக்கு வைக்கப்பட்டுள்ள சிலை. கேத் வின்ஸ்லெட்டுக்கு வேறு இடங்களில் சிலைவைத்தால், சாலையில் வாய்பிளந்தபடி செல்லும் மக்கள் விபத்துக்குள்ளாக நேரிடும் என்ற உயரிய நோக்கத்தால்தான், லட்சோப லட்சம் மக்கள் வந்து நின்று நிதானமாக ரசித்துவிட்டுச் செல்ல கடற்கரையோரம் சிலை வைக்க இடம் ஒதுக்கியது காதலுக்குக் கிடைத்த மரியாதை. இந்தச் சிலை இங்கிருப்பதால் இனி சென்னையை சுனாமி தாக்காது.

# பொய் - பொய்யைத் தவிர வேறில்லை!



இவ்வாறு அவர் பேசினார்.

விழாவில் கேத் வின்ஸ்லெட்டின் தூரத்து உறவினர்களான டி காப்ரியோ, பரவை முனியம்மா, போண்டா மணி, முத்துக்காளை உட்பட பலர் கலந்து கொண்டனர். விழாவின் முடிவில் டைட்டானிக் திரைப்படம் வெண்திரையில் ஒளிபரப்பப்பட்டது.

- முகில்

சின்சினாட்டி ஓபனில் இறுதிப் போட்டிவரை சென்று மீண்டும் தலைப்புச் செய்திகளில் இடம் பிடித்திருக்கிறார் சானியா மிர்சா. பொதுவாக மீடியா என்றால் காததூரம் ஓடும் சானியா மிர்சா, தமிழ்ப் பத்திரிகைகளில் கல்கிக்கு மட்டும் அடிக்கடி ஸ்பெஷலாகப் பேட்டி கொடுப்பார். பி.டி. உஷாவின் குற்றச்சாட்டு, சிம்புவுடன் நடிப்பது, திருமணம் என்று பல விஷயங்கள் குறித்து மனம் திறந்து நம்மிடம் பேசினார்.

**விம்பிள்டன் முதல் ரவுண்டில் ஜெயிக்கிற நிலைமையிலிருந்து எதனால் தோற்றுப் போனீர்கள்? உங்கள் ஆட்டம் இன்னும் மெருகேற வேண்டுமென்று விஜய் அமிர்தராஜ் கூறியது பற்றி...**

"சர்வதேசப் போட்டிகள்ல கடைசி பாயிண்ட் ஜெயிக்கிற வரைக்கும் வெற்றி உறுதி கிடையாது. நான் எதிர்த்து ஆடினது எட்டாவது ரேங்கிங் உள்ள வீரர். இவங்க எல்லாம் ஆட்டத்துக்கு நடுவுல எப்போ வேண்டுமானாலும் முழிச்சுக்குவாங்க. ஏன் நான்கூட எத்தனையோ முறை மேட்ச் பாயிண்ட் வரைக்கும்போய் மீண்டுவந்து ஜெயிச்சிருக்கேனே. விஜய் அமிர்தராஜ் சார் நேர்ல வந்து என் ஆட்டத்தை மெருகேத்திக் கொடுத்தா இன்னும் நான் சந்தோஷப்படுவேன். என் வளர்ச்சியைப் படிப்படியா பார்த்தவர் அவர். இந்தியாவுல டென்னிஸை நல்லாத் தெரிஞ்ச சிலர்ல அவரும் ஒருவர்."



# "கல்யாணத்துக்குப் பிறகு

**சானியா மிர்சாவின் புகழுக்குக் காரணம் திறமை மட்டுமல்ல என்று பி.டி.உஷா கல்கிக்குப் பேட்டி கொடுத்தது குறித்து...?**

"நம்ம நாட்டுல செஸ், பில்லியர்ட்ஸ்ல உலக அளவிலான வீரர்கள் இருந்தும் ரசிகர்களை ஈர்க்கக்கூடிய விளையாட்டா அவை இல்லாததால வீரர்களும் பெருசா பேசப்படலை. கால்பந்து கதை வேறு. நாம அதுல எதுவும் சாதிக்காட்டியும் ரசிகர்களை அந்த விளையாட்டு கவர்ந்திழுக்கறதால கொல்கத்தாவுல நடக்குற ஒவ்வொரு மேட்சுக்கும் ஆயிரக்கணக்கான ரசிகர்கள் கூடுறாங்க. டென்னிஸ் இருநூற்று ஐம்பது நாடுகள்ல ஆடப்படுது. அதனால புகழ் தாராளமாக் கிடைக்குது.

பி.டி. உஷாவோட சாதனைகளை நான் ரொம்பவே மதிக்கறேன். தன் திறமைக்கேற்ற பேர், புகழ் எல்லாம் கிடைக்கலைன்னு அவங்க நினைச்சா அதுக்காக நானும் வருத்தப்பட்டுக்கிறேன். எல்லோரும் நினைக்கற மாதிரி நான் டென்னிஸைப் பணத்துக்காகவோ, பேர், புகழுக்காகவோ ஆடலை; அதன் மீதுள்ள காதலால். வெற்றி வந்து சேரச்சேர எனக்குப் புகழ், பணம் எல்லாம் கிடைக்குது."

**கலப்பு இரட்டையர் ஆட்டங்கள்ல மகேஷ் பூபதி - லியாண்டர் பயஸ், யார் உங்களுக்குப் பொருத்தமானவங்க?**

"மகேஷ் பேக்ஹேண்ட் ஸ்பெஷலிஸ்ட். நான் ஃபோர்ஹேண்ட் ஸ்பெஷலிஸ்ட். இரண்டு பேரும் இணைஞ்சா ஆட்டம் எப்படி களைகட்டும் தெரியுமா! அதே சமயம் லியாண்டரும் எனக்குப் பொருத்தமாத்தான் இருப்பார்."

**விளம்பரங்களில் நடிப்பது தொடர்ந்து சர்ச்சைக்குரியதாகிறதே?**

"ஆரம்பத்துல விளம்பரங்கள்ல நடிச்சதாலதான் என்னால வெளிநாடுகளுக்குப் போய் ஆட முடிஞ்சுது. இப்போ போட்டியில ஜெயிக்கிற பணமும் கைகொடுக்க ஆரம்பிச்சிருக்கு. ஆனாலும்

விளம்பரங்கள்ல நடிப்பதைக் கைவிடலை. ஒரு வேளை நான் விளையாட்டுல 'டல்' லடிச்சா விளம்பர வருவாய் தானே எனக்குக் கைகொடுக் கும். யாரும் கவலைப்பட வேண்டாம். வருஷத்துக்கு இருபத்தைந்து நாட்களுக்கு மேலே கேமரா முன்னாடி நிக்க மாட்டேன்."

**தமிழ் நடிகர் சிம்பு உங் களைச் சந்தித்துப் பேசிய தாகச் சொல்கிறாரே? தெளி வாகச் சொல்லுங்கள்... சினிமாவில் நடிப்பீர்களா?**

(கோபமாகிறார்) "நான் நூறுமுறை சொல்லிட்டேன். நான் என்னைக்கும் சினிமா வுல நடிக்கமாட்டேன்... நடிக்கமாட்டேன்... நடிக்க மாட்டேன்! எனக்குச் சிம்பு வைப் பற்றித் தெரியாது. மற்றபடி இது சம்பந்தமாகச் செய்தி பரப்புபவர்கள் எல்லாருமே பொய்யர்கள்."

**திருமணத்துக்குப் பிறகு டென்னிஸ் தொடருமா?**

"மாட்டேன். டென் னிஸை முழு மூச்சா ஆடி னாத்தான் அதுக்குரிய பலனை அடைய முடியும். திருமணம் பண்ண முடி வெடுத்தா கட்டாயம் டென் னிஸைப் பின்தள்ள வேண்டி

# டென்னிஸுக்கு டாட்டா!"



யிருக்கும். எல்லா இந்தியப் பெண்கள் மாதிரி நானும் கல்யாணத்துக்குப் பிறகு டென்னிஸிலிருந்து விலகி ஒரு நல்ல இல்லத்தரசியா இருப்பேன்."

- ச.ந.கண்ணன்



# சுப்பு பாட்டியின் சுப்ரபாதம்!

சினிமா மணியிடமும் முத்துராக்கிடமும் பேசிவிட்டு வீடு வந்து சேர்ந்தேன். இப்போதெல்லாம் என் தந்தையார் என்னிடம் 'உங்க நாடகம் என்னடா ஆச்சு?' என்று கேட்கிற அளவுக்கு ஆர்வமாகப் பேசத் தொடங்கிவிட்டார். இரண்டு நாட்கள் கழித்து நான் எழுதிய புதிய நாடகத்தோடு மணி வீட்டிற்கு விரைந்தேன். அங்கு ஏற்கெனவே சபை கூடியிருந்தது.

''சொல்லுங்க தம்பி, புது நாடகக் கதை என்ன? ஏதாவது தேசபக்திக் கதையா? மர்ம நாடகமா? குடும்ப ஒற்றுமையா?'' என்று முத்துராக்கு ஆர்வமாகக் கேட்டார்.

''முழுக் கதையும் வசனமும் சொல்ல வேண்டாம். ஒரே வரியில கதை சொல்லு'' என்றான் மணி சுருக்கமாக. இந்தக் காலத்தில் 'ஒன் லைன் ஸ்டோரி' என்பதை அப்போதே மணி தெரிந்து வைத்திருந்தது ஆச்சரியம்தான்.

"நம் கதாநாயகன் ஒரு பெண்ணைக் காதலிக்கிறான்" என்று நான் தொடங்கியவுடன்...

''அப்ப அந்தப் பொண்ணு இவனைக் காதலிக்கலையா?'' என்றான் கண்ணாடி சேகர்.

"இருங்கடா சொல்லட்டும்... யாரும் குறுக்கே பேச வேண்டாம்" என்றான் மணி.

''ரெண்டுபேரும் ஒருத்தரை ஒருத்தர் விரும்புறாங்க. ஆனால் சிக்கல் என்ன தெரியுமா? கதாநாயகனோட அப்பா தன் தங்கை மகளைத்தான் கல்யாணம் செய்ய வேண்டும் என்கிறார்.

தாயோ தன் அண்ணன் மகளைத் தான் கட்ட வேண்டும் என்கிறார்.

மூத்த அண்ணனோ, தன் மனைவியின் தங்கையைத்தான் திருமணம் செய்ய வேண்டும் என்கிறான்.

மூத்த அக்காவோ தன் மகளைத்தான் கட்ட வேண்டும், இல்லாவிட்டால் நட்



படம் : புதூர் சரவணன்

கு.ஞானசம்பந்தன்





பதே வேறு என்கிறார்.

கதாநாயகன் தான் காதலித்த பெண்ணைக் கல்யாணம் செய்தானா என்பது தான் சஸ்பென்ஸ்" என்று நான் நாடகக் கதையைச் சொல்லி முடித்தேன்.

"தம்பி, ஆத்துமணலை எண்ணினாலும் எண்ணலாம்; அர்ச்சுனன் பெண்டாட்டிகளை எண்ண முடியாதுன்னு எங்க தாத்தா ஏக்கத்தோடு சொல்லுவாரு. நீங்க என்ன நவீன அர்ச்சுனன் கதை மாதிரி எழுதியிருக்கிங்களோ?" என்றார் முத்துராக்கு.

"இதுல என்னடா புதுசா இருக்கு? 'பொன்வண்டு'ன்னு ஒரு படம். அதுல ஜெய்சங்கர் அஞ்சு பேரைக் காதலிக்கிற மாதிரி நடிப்பாரு. அப்படிக் கதையா?" என்றான் சேகர்.

பேசாமல் கேட்டுக்கொண்டிருந்த சினிமா மணி "டேய் ஒரு யோசனைடா, இதைப் புதுமையாச் செய்வோம்டா" என்றான் அலுப்புடன்.

நான் நாடகக் கதையினைச் சொல்லி முடித்தவுடன், அதைப் புதுமையாகச் செய்ய வேண்டும் என்று சொன்ன சினிமாமணி, "நீ சொன்ன நாடகத்தில் அந்தக் கதாநாயகன் கடைசியில தான் காதலித்த பெண்ணைக் கல்யாணம் செய்கிறானா? அல்லது அவனுடைய குடும்பத்தார் விரும்பிய பெண்களில் யாரையாவது திருமணம் செய்கிறானா? இதுதானா சஸ்பென்ஸ்?" என்று மணி கேட்டான்.

"ஆமடா, நாமதான் அந்த சஸ்பென்ஸை உடைக்கணும்" என்றேன் நான்.

"ஏன் சஸ்பென்ஸை உடைக்கணும்? அப்படியே விட்டுட்டு கதைய முடிச்சா என்ன?" என்றான் மணி.

"நீ சொல்றது ஒண்ணும் புரியலையே" என்றேன் நான்.

"அதாவதுடா, நம்ம கதாநாயகன் தான் காதலித்த பெண்ணையே கடைசியிலே கல்யாணம் பண்றான். அதுக்கிடையில, தன்னோட அப்பா, அம்மா, அக்கா, அண்ணன் இவங்களையெல்லாம் சமாளிக்கிறான். உண்மைக் காதல் ஜெயிச்சது வணக்கம் - அப்பிடின்னு சொன்னா அதுல என்ன புதுமை இருக்கு; ஒண்ணும் இல்லையே..." என்றான் மணி.

"தம்பி சொல்றதிலேயும் ஒரு அர்த்தம் இருக்கிற மாதிரி எனக்குத் தெரியுது.." என்று தொடங்கிய முத்துராக்கு, "எதிர்பாராதது அப்பிடின்னு ஒரு படம் வந்தது. அதுல கதாநாயகன் நம்ம சிவாஜி. கதாநாயகி நாட்டியப் பேரொளி பத்மினி. ரெண்டு பேரும் உயிருக்கு உயிரா காதலிப்பாங்க, முடிவு என்னா தெரியுமா?"

"வில்லன் வந்து கதாநாயகியைக் கல்யாணம் பண்ண, கதாநாயகன் பட்டாளத்தில் சேர்ந்து தியாகியா செத்துப் போவான். அதுதான்" என்றான் கண்ணாடி சேகர்.

"அப்பிடித்தான் சாதாரண ரசிகன் யோசிப்பான். ஆனா படைப்பாளிகள், புதுமை செய்யணும்னு நெனைக்கிற ஸ்ரீதர் போன்ற இயக்குநர்கள் எப்பிடி யோசிச்சாங்க தெரியுமா? கதாநாயகி பத்மினியைக் கதாநாயகனின் அப்பாவான நாகையா கல்யாணம் பண்ண, தன் காதலியே தனக்குச் சின்னம்மாவா வர்ற அதிர்ச்சியைக் கதாநாயகன் அடைகிறான்."

"இதென்ன எதிர்பாராத திருப்பமாயிருக்கு" என்று நான் கேட்க, "அதனால தான் படத்தோட பேரே 'எதிர்பாராதது' அப்பிடின்னு வச்சாங்க. அந்தப் படத்தில நடிகர் திலகம் சிவாஜி, நம்ம பத்மினி, பழம்பெரும் நடிகரான நாகையா மூணு பேரும் போட்டி போட்டுக்கிட்டு நடிச்சிருப்பாங்க தம்பி. அதுலேயும் 'சிற்பி செதுக்காத பொற்சிலையே'ன்னு ஏ.எம். ராஜா பாடுற ஒரு பாட்டு அப்ப ரொம்பப் பிரபலம்" என்று சொன்ன முத்துராக்கு,

ENJOY POURNAMI (FULLMOON NIGHT) AT MANASAROVER

திருக்கயிலாயம்-மானஸரோவர்-முக்திநாத்

8-ம் ஆண்டு புனித யாத்திரை புறப்படும் மாதங்கள் ஆகஸ்ட், செப்டம்பர்-2006

சென்னையிலிருந்து இரயில் மூலம் காட்மண்டு சென்று, அங்கிருந்து டயோட்டா கார் மூலம் திருக்கயிலாயம் சென்று தரிசித்து, பின் இரயில் மூலம் சென்னை வருவதற்கு 22 நாட்கள் ஆகும். இரயில் கட்டணம் உட்பட (சூப்பர் டீலக்ஸ் வசதியுடன்) ரூ.52,900/- மட்டுமே.

டெல்லியிலிருந்து விமானத்தில் காட்மண்டு சென்று, அங்கிருந்து டயோட்டா கார் மூலம் திருக்கயிலாயம் சென்று தரிசித்து, பின் விமானம் மூலம் டெல்லி வருவதற்கு 17 நாட்கள் ஆகும். விமான கட்டணம் உட்பட (சூப்பர் டீலக்ஸ் வசதியுடன்) ரூ.56,900/- மட்டுமே.

சென்னையிலிருந்து டெல்லி வரை விமானம், ரயிலில் சென்று வர தங்கள் வசதிக்கு ஏற்ப ஏற்பாடு செய்து தரப்படும்.

[illegible] பாஸ்போர்ட் மிக அவசியம். பாஸ்போர்ட் இல்லாதவர்களுக்கு ஏற்பாடு செய்து தரப்படும்.

தென்னிந்தியாவில் இருந்து சிவ பக்தர்களை அதிகமாக அழைத்து செல்லும் அனுபவமிக்க ஒரே நிறுவனம்

திருக்கயிலாயம், மானஸரோவர், முக்திநாத் திருப்பயணத்தின் சிறப்பம்சங்கள்

[illegible] (New Jeep) [illegible] (Mud Houses) [illegible]

TO GET BEST SERVICE TRUST THE SPECIALIST

ஸ்ரீ அன்னபூரணி யாத்ரா சர்வீஸ்

(Specialist in Holy Mt.Kailash - Manasarovar & Mukthinath Yatra)

68, நடுத்தெரு, மயிலாப்பூர், சென்னை - 600 004.

Cell : 93400 22233 / 92822 26230

SPECIAL CARE FOR SENIOR CITIZENS

பழைய நினைவுகளில் மூழ்கித் திளைத்து விட்டு, "நடிகை பத்மினி இருக்காங்க பாருங்க, அவங்க சிறந்த நடிகை மட்டுமில்ல, சிறந்த பரதநாட்டியக் கலைஞரும் கூட. லலிதா, பத்மினி, ராகினி, இந்த மூணு பேரும் கூடப்பிறந்த சகோதரிகள்..." என்று முத்துராக்கு ஒரு குட்டிப் பிரசங்கம் செய்தார்.

"சரி, அதெல்லாம் இருக்கட்டும். நம்ம நாடகக் கதாநாயகன் யாரைக் கல்யாணம் பண்றான்? அத முதல்ல சொல்லுங்க, நான் நூலகத்துக்குப் போறதாச் சொல்லி விட்டு வந்திருக்கேன். எங்க பாட்டி என்னையத் தேடி நூலகம் போயிருப்பா" என்று கவலையோடு சொன்னான் கண்ணாடி சேகர்.

சேகர் தன் பாட்டி பேரைச் சொன்னவுடன் நாங்கள் உஷாரானோம். காரணம் சேகருடைய அப்பாவும், அம்மாவும் பம்பாயில் இருந்ததால் தன் பாட்டி வீட்டில் தங்கிப் படித்துக் கொண்டிருந்தான் அவன். எங்களுக்கும் அவன் பாட்டி சுப்புவுக்கும் அவ்வளவாக ஆகாது. எப்போதும் எங்களைப் பார்த்து சுப்ரபாதம் வாசிப்பாள்.

"சேகர் நீ புறப்படு. இந்த மாதக் கடைசியில நூலக ஆண்டு விழாவில நாம இந்த நாடகத்தை அரங்கேற்றம் பண்றோம்" என்றான் மணி உறுதியாக.

"இந்த மாதமா? இன்னும் ஒரு வாரம் தானடா இருக்கு. அதுக்குள்ள முடியுமா?" நான் சந்தேகத்தோடு கேட்டேன்.

"முடியும்டா" என்று சொன்னபடி முடித்துக் காட்டினான் மணி.

எப்படி?

(ரீல் சுற்றும்)

"புதிதாக ஃப்ரிட்ஜ் வந்திருக்கிறது என்று குளிர்ந்த நீரை அதிகமாய்க் குடிக்காதீர்கள் என்றேனே கேட்டீர்களா மன்னா... இப்போதெல்லாம் உங்களை ஜலதோஷப்பிரதாபன் என்கிறார்கள்."

- சுப்புணி

# ராசிபலன்

**மேஷம்:** யோகமான வாரம். தனம், குடும்பம், கல்வி மேலோங்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வேலையில் மாற்றம் ஏற்படும். பொருளாதார கஷ்டம் இருக்காது. கணவன்-மனைவி உறவு நன்றாக இருக்கும். வெளிநாட்டு அழைப்பு வந்து சேரும். உத்தியோகத்தில் ஊதிய உயர்வு, இடமாற்றம் ஏற்படும். திருமணம் தடை விலகி கைகூடும். குழந்தை பாக்கியம் கிட்டும். குழந்தைகளால் சந்தோஷம் ஏற்படும். தாயாரின் உடல்நிலை சற்று பாதிக்கப்படும். ஆஞ்சநேயரை சனிக்கிழமை தோறும் தரிசனம் செய்து வரவும்.

**ரிஷபம்:** குழந்தைகள் பற்றின மனக் கவலை தீரும். சுபகாரியப் பேச்சுவார்த்தைகள் நற்பலனை அளிக்கும். குழந்தைகள் இடம் மாறிப் போவார்கள். மறைமுக எதிர்ப்பு / தொல்லை விலகும். நெருங்கிய உறவினர் / நண்பர்களிடம் மனஸ்தாபம் ஏற்படும். வீடு மாற்றம் ஏற்படும். பணக் கஷ்டம் விலகும். உத்தியோகத்தில் மாறுதல் ஏற்படும். கணவன் - மனைவி அனுசரித்துப் போவது நற்பலனை அளிக்கும். வியாபாரத்தில் கணிசமான முன்னேற்றம் ஏற்படும். புதிய முயற்சிகளைச் சற்றுத் தள்ளிப் போடுவது நல்லது. ராகு / கேது / குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

**மிதுனம்:** நல்லது நடக்கும். நண்பர் / உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். குழந்தைகள் வழியில் சுப நிகழ்ச்சிகள் கைகூடும். தூரதேச அழைப்புகள் கிட்டும். உடல்நிலை நன்றாக இருக்கும். பணக் கஷ்டம் வராது. வீடு வாங்கும் யோகம் உள்ளது. நீண்டகால எண்ணங்கள் பலிதமாகும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். ராகு / கேது வழிபாடு நற்பலனைத் தரும்.

**கடகம் :** தெய்வ அனுகூலம் ஏற்படும். வீடு மாற்றம் ஏற்படும். புதிய வேலை வாய்ப்பு வந்து சேரும். கல்வியில் மேன்மை ஏற்படும். பணக் கஷ்டம் விலகும். குழந்தைகளால் சந்தோஷம் ஏற்படும். திருமணக் காரியம் கைகூடும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். வீடு வாங்கும் யோகம் வந்து சேரும். உடல்நிலை பாதிக்கப்படாது. பத்திரிகைகளில் பெயர் வரும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். குரு / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

30.7.06 முதல் 5.8.06 வரை

நடக்குமென்பார்

# தஞ்சை பரத்வாஜ்

**சிம்மம்:** எதிர்நீச்சல் போட்டு வெற்றிக் கனியை அடையும் வாரம். மறைமுக எதிர்ப்புகள் இருக்கும். கொடுக்கல் வாங்கலில் கவனம் தேவை. வண்டி வாகனத்தில் செல்லும்போது உஷார். யாருக்கும் ஜாமீன் போடக் கூடாது. வாக்குவாதம் தவிர்க்கவும். கணவன் – மனைவி அனுசரணையாக நடந்து கொள்வது நல்லது. உடல்நிலையில் கவனம் தேவை. திருமண முயற்சியில் தடங்கல் வரும். வியாபாரம் மந்தமாகவே இருக்கும். நண்பர் / உறவினர்களால் ஆதாயம் கிட்டும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

**கன்னி:** சுப காரியம் கைகூடும். மன சஞ்சலம் தீரும். வாக்குவன்மை மேலோங்கும். நீண்டதூரப் பிரயாணம் வந்து சேரும். பணக்கஷ்டம் இருக்காது. வீடு / வாகனம் வாங்க நல்ல காலம். குழந்தைகள் வழியில் சந்தோஷம் ஏற்படும். உத்தியோகத்தில் நற்பலன் கிட்டும். வெளிதேசம் செல்லும் வாய்ப்பு வந்து சேரும். நண்பர் / உறவினர் மூலம் ஆதாயம் ஏற்படும். சத்ரு தொல்லை விலகும். பதவி உயர்வு ஏற்படும். கணவன் – மனைவி உறவு சீராக இருக்கும். புதிய முயற்சிகள் பலன் அளிக்கும். வியாபாரத்தில் ஆதாயம் ஏற்படும். ராகு / கேது /வழிபாடு நற்பலனைத் தரும்.

**துலாம்:** எடுத்த காரியத்தில் வெற்றி கிடைக்கும். எதிரிகள் தொல்லை ஒழியும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். பணக்கஷ்டம் விலகும். வீடு/மனை வாங்குவீர்கள். மனக் குழப்பம் தீரும். கணவன் – மனைவி உறவு நன்றாக இருக்கும். வீட்டில் சுப நிகழ்ச்சிகள் நடக்கும். குழந்தைகள் இடமாறிச் செல்வார்கள். நண்பர் / உறவினர் மூலம் ஆதாயம் கிட்டும். திருமணத் தடை விலகும். உடல் நிலை நன்றாக இருக்கும். வியாபாரத்தில் நல்ல விறுவிறுப்பு ஏற்படும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். குரு / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

**விருச்சிகம்:** செல்வாக்கு மிகுந்த வாரம். புதிய முயற்சிகள் பலிதம் ஆகும். நண்பர் / உறவினர்கள் அனுகூலம் ஏற்படும். திருமணக் காரியம் கைகூடும். வீடு மாற்றம் / தொழில் மாற்றம் வரலாம். உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். அந்தஸ்து உயரும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். நண்பர்கள் விலகிப் போவார்கள். குழந்தைகள் வழியில் சுபநிகழ்ச்சி ஏற்படும். தூரதேச மனிதர்களால் ஆதாயம் கிட்டும். எதிரிகள் தொல்லை இருக்காது. செலவுகள் கட்டுக்குள் இருக்கும். வியாபாரத்தில் நல்ல லாபம் ஏற்படும். ராகு / கேது / குரு வழிபாடு செய்து வர, நற்பலன் கிட்டும்.

**தனுசு:** நற்பலன்கள் கைகூடும் வாரம். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். தொழில் ஸ்தானத்தில் மாற்றம் வரும்.

• படம் : ஸ்ரீஹரி



# நடக்கும்!

# பரத்வாஜ் பதில்கள்...

**• என் பெண்ணுக்கு எப்போது திருமணம் நடக்கும்? எதிர்காலம் எப்படி இருக்கும்?**

**- எம்.எஸ்.மூர்த்தி, கோயமுத்தூர்**

தங்கள் பெண்ணுக்கு ராகு தசை நடக்கிறது. 20.4.2007-க்குப் பிறகு திருமணம் கைகூடும். வெளிநாட்டு வரன் அமையும். ஒரே பையன், ஒரே பெண் உள்ள இடத்தில் திருமணம் நடக்கும்.

**• எனக்கு எப்போது திருமணம் நடைபெறும்?**

**- எஸ். அசோக், மேற்கு மாம்பலம்**

தங்கள் ஜாதகப்படி 9.10.2006-க்குப் பிறகு திருமணம் கைகூடும். பிறந்த ஊருக்கு மேற்குத் திசையில் உடன் பிறந்தோர் இருவர் உள்ள வரன் அமையும். இல்லற வாழ்வு நன்றாகஇருக்கும்.

**• விரைவில் என் கடனை அடைத்து விடுவேனா?**

**- வி.கோவிந்தசாமி, சட்டநாதபுரம்**

தங்கள் ஜாதகப்படி தற்பொழுது சனிதசை 70 வயது 3 மாதங்கள், 8 நாட்கள் வரை நடக்கும். அதுவரை தங்களுக்கோ, தங்கள் மனைவிக்கோ கடன் தொல்லைகளோ, வியாதியோ படுத்தி எடுக்கும். ஆஞ்சநேய சுவாமியை வழிபட்டு வருதல் நல்லது. அதன்பிறகு புதன் தசை 17 வருடங்கள் நற்பலனைத் தரும்.

சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். திருமணக் காரியம் கைகூடும். நண்பர் / உறவினர்களால் ஆதாயம் கிட்டும். உடல் ஆரோக்கியம் பாதிக்கப்படாது. வியாபாரத்தில் நல்ல லாபம் ஏற்படும். புதிய தொழில் துவங்கலாம். வீடு / வாகனம் வாங்க நல்ல தருணம். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். ராகு / கேது / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

**மகரம்:** உடல்நிலையில் கவனம் தேவை. கணவன் - மனைவி அனுசரணையாக நடந்துகொள்வது நல்லது. கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கையாக இருக்கவும். தாயின் உடல்நிலை பாதிக்கப்படும். சிலருக்குத் தந்தையை விட்டு விலகும் சூழ்நிலை உருவாகும். தெய்வ அனுகூலம் ஏற்படும். குழந்தைகளால் சந்தோஷம் ஏற்படும். நண்பர்களால் கடன் ஏற்படும். புதிய தொழில் முயற்சியைச் சற்றுத் தள்ளிப்போடவும். உத்தியோகத்தில் வேலைப் பளு அதிகரிக்கும். மேல் படிப்புக்கு முயன்ற மாணவர்களுக்குச் சற்றுத் தாமதித்துப் பின் வெற்றி கிட்டும். குரு / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

**கும்பம்:** வாக்குவாதத்தைத் தவிர்க்கவும். குடும்ப வாழ்வில் அனுசரணை தேவை. அவசரப்பட்டு வேலை மாற வேண்டாம். உடல்நிலையில் கவனம் தேவை. திருமணத் தடை விலகும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். வண்டி வாகனத்தில் போகும்போது கவனம் தேவை. கூட்டுத் தொழில் செய்பவர்கள் உஷார். கணவன் - மனைவி உறவின் மூலம் ஆதாயம் ஏற்படும். நீண்ட தூரப் பிரயாணம் செல்ல நேரிடும். ராகு / கேது வழிபாடு நற்பலனைத் தரும்.

**மீனம்:** டென்ஷன் நிறைந்த வாரம். எல்லாவற்றிலும் பொறுமை, நிதானத்துடன் செயல்பட வேண்டும். தொழில் துறையில் வேலைப்பளு அதிகரிக்கும். கணவன் - மனைவிக்குள் கோபம் வேண்டாம். கூட்டாளிகளால் ஆதாயம் கிட்டும். உடல்நிலையில் கவனம் தேவை. வாக்குவாதத்தைத் தவிர்க்கவும். உத்தியோகத்தில் வேலைப்பளு அதிரிக்கும். மாணவ / மாணவியர்கள் முயன்றால் எதிர்பார்த்த வெற்றி கிட்டும். திருமணம் கைகூடும். எண்ணிய யாவும் ஈடேறும். வெளிநாட்டு மனிதர்களால் ஆதாயம் கிட்டும். புதிய முயற்சிகள் கைகொடுக்கும். செலவுகள் பயனுள்ளதாக இருக்கும். ராகு / கேது / குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

# V.P.M.வர்மக்கலை வைத்திய சாலை
## பரம்பரை வைத்தியர்







தலைவலி, கழுத்து வலி, தோள்பட்டை வலி, நெஞ்சு வலி, இடுப்பு வலி, மூட்டு வலி மற்றும் நமது உடலில் உள்ள அனைத்து வலிகளையும், நோய்களையும் வர்ம முத்திரைகளின் மூலம் பக்க விளைவுகள் ஏதும் இல்லாமல் நிரந்தரமாகக் குணப்படுத்தப்படும்.

தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி

**H.O.:**
வர்மாணியர் V.P. முத்துசாமி
பாலமுருகன் திருமண மண்டபம் எதிரில்,
சென்னிமலை ரோடு, பெருந்துறை.
போன்:(O)04294-226001,(R)04294-248308

**B.O.:**
வர்மாணியர் V.M. சங்கர்
கருவம்பாளையம், 57,K.V.P. லே அவுட்,
ஆலங்காடு,திருப்பூர். செல்: 98659-22231
போன்:Res:04294-248 308

பார்வை நேரம்: காலை 10.00 மணி முதல் மாலை 6.00 மணி வரை

---

# இப்போது விற்பனையில்... Now on Sale...

ஆகஸ்ட் 2006 2 புத்தகங்கள்

**கள்ளக் காதல் கொலைகள் அதிகம் நிகழ்வது ஏன்?**

உளவியல் ஆய்வு **Exclusive**

**மதுவுக்கு அடிமையாகும் மாதுக்கள்**

காரணம் என்ன? விடுபடுவது எப்படி?

ஹெல்த் டுடே

NO. 1

மங்கையர் மலர்

**ரமணி சந்திரன்** எழுதி மயக்கும்

**எனது சிந்தை மயங்குதடி...**

வாசகர்களை கதையோட்டத்தில் கட்டிப்போடும் புத்தம் புது நாவல்

அதிர்ஷ்ட விஞ்ஞான ஜோதிடர் கே.ஆர். பிரபாகர் ராஜ் கணிக்கும்

**2006 - 2007 குருபெயர்ச்சி பலன்கள்** (எண் கணிதம்)

செல்வச் செழிப்பைத் தரும் யந்திரம் இலவசம்

**விவேக் பப்ளிகேஷன்ஸ்** 6/84, மல்லன் பொன்னப்பன் தெரு திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.
போன் : 28483163, 28487533. டெலி**பேக்ஸ் : 28480610

**ஹா**ய்! ஒரு நீளமான அக்ஞாத வாசத்துக்கப்புறம் திரும்பி வந்துட்டேன். மன்ற உறுப்பினர்களோட வரவேற்புக் கரவொலியும் இங்க்லீஷ் விரோதிகளோட நரநர பல்லொலியும் சேர்ந்து கேட்குது காதுகளுக்கு!

ப்ரின்ஸ் (இது இங்க்லீஷ்ல அவன் அப்பா - அம்மாவே அவனுக்கு வைச்ச பேரு!) பத்தின நியூஸ், தி ஹிந்துவோட ஹெட்லைன்னைப் பிடிச்சுடுத்து பார்த்தீங்களா! அறுபதடி ஆழக் குழியில ஐம்பது மணி நேரம் விழுந்து கிடந்த இந்த அஞ்சு வயசுப் பையனை ஆர்மி காப்பாத்தி வெளியில கொண்டு வந்திருக்கு. குழியோட அகலம் பதினாலு இஞ்ச்சைக் காட்டிலும் கம்மி.

இராணுவ வீரர்கள் அவனை அவன் அம்மா கரம்ஜித்கிட்டே ஒப்படைச்சப்போ ஆனந்தக் கண்ணீர் பெருக்கியிருக்காங்க; ஆனா ப்ரின்ஸ் அழவேயில்லை. போன ஜன்மத்துல ஏதாவது வீர சாம்ராஜ்யத்து இளவரசனா இருந்திருப்பானோ...?

**ம**ரணத்தின் பிடியிலேர்ந்து இராணுவத்தால் மீட்கப்பட்ட இந்த ப்ரின்ஸ் சம்பவத்தைப் பத்தி யோசிச்சுக்கிட்டிருந்தப்போ எனக்கு என் ஃப்ரெண்டோட பையன் சொன்னது ஞாபகம் வருது. அவன் பெயர் பாலு. பாலுவோட கொள்ளுப் பாட்டி படுத்துத் தூங்கிட்டேயிருப்பாங்க. "நீ ஏன் எப்பவும் இப்படித் தூங்கிட்டேயிருக்கே?" - இது பாலு கொ.பாட்டிகிட்டே கேட்ட கொஸ்டியன்.

கொ.பாட்டி : ஏன்னா எனக்கு வயசாச்சு.

பாலு : வயசானா என்னாகும்.

கொ.பாட்டி : சாமிகிட்டே போக வேண்டியதுதான்.

பாலு : சாமி எங்கே இருக்கும்...?

கொ.பா : ஆகாசத்துல...

பாலு : நீயும் செத்துப் போய் அங்கே போய்டுவியா?

கொ.பா : ஆமாம். சாமி கூப்பிடறப்போ போய்டுவேன்.

பாலு : ஊஹும்... நீ போனா, நான் விடமாட்டேன்... போலீஸ் மாமாகிட்டே சொல்லி பெரிய்...ய்ய ஏணி கொண்டு வரச் சொல்லி, அது மேலே அவரை ஏத்தி அனுப்பி உன்னைத் திரும்பக் கூட்டி வந்துடுவேன்...

கியூட் டயலாக் இல்லே! அதே நேரத்துல போலீஸ் மேல எவ்வளவு நம்பிக்கை பாருங்க!

போலீஸால எதுவும் முடியும்னு குழந்தைங்க நம்பற அளவுக்கு ஒரு இமேஜை பெரியவங்க உருவாக்கறாங்க... ஆனா வளர்ந்தப்புறம்தானே அதெல்லாம் மாறி... ஆன்டி க்ளைமேக்ஸாகுது. தொப்பை ஜோக், கபாலி ஜோக், லஞ்ச ஜோக்னு போலீஸை நார்நாராக்கற அளவுக்கு மைன்ட் மாறிப் போகுது.

யோசிச்சுப் பார்த்தா, போலீஸ் பத்திய உண்மையான பிம்பம் இந்த இரண்டு எக்ஸ்ட்ரீமுக்கும் நடுவுல எங்கேயோ ஒளிஞ்சுக்கிட்டிருக்கு.

இதைத்தான் சமீபத்துல சென்னைக்கு வந்திருந்த சூப்பர்காப் கிரண்பேடி ரொம்ப அழகா தொட்டுக் காட்டினாங்க. பால்கிவாலா ஃபவுண்டேஷன் என்கிற அமைப்பு அவங்களோட லெக்சருக்கு ஏற்பாடு பண்ணியிருந்தது. 'இந்திய காவல்துறையின் (இன்றைய) சவால்கள்' - இதுதான் தலைப்பு (அவங்க இங்லீஷ்ல தந்த தலைப்பை நான் சமர்த்தா தமிழாக்கித் தந்திருக்கேன் பாருங்க!).

• கிரண்பேடி



# காவல் துறையும்

நேற்று, இன்று, நாளைன்னு பிரிச்சுக் கிட்டு காவல்துறையோட நிலைமையை கிரண்பேடி அலசினாங்க :

சுமார் முப்பது வருஷம் முன்னாடி அவங்க காவல்துறைல என்டர் ஆனப்போ ஆள் பலம், ஆயுத பலம் இரண்டுமே ரொம்பக் குறைவா இருந்தது. சிறைச் சாலைகள்ல ஏகப்பட்ட வயலன்ஸ் (போலீஸ் வன்முறைதான்). போலீஸுக்கு வேலைப்பளு ரொம்ப அதிகம்; பணிச் சூழல் படு மோசம்! பயங்கரவாதம் பஞ்சாப்ல என்டர் ஆகியிருந்தது.

• இன்னைக்குக் காவல்துறை அனுபவிக்கிறதெல்லாம் 'நேற்று' இருந்த சூழல், நடந்த மிஸ்டேக்ஸோட விளைவுகளைத்தான். இந்த மோசமான விளைவுகளோட இன்னொரு சவாலும் 'ப்ளஸ்' ஆகியிருக்கு. அதுதான் அரசியல் தலையீடு!

அதோட 'மனித உரிமை'ன்ற பேர்ல பல அமைப்புகள் குற்றவாளிகளோட ரைட்ஸைப் பத்தி மட்டும் அதிகமா கவலைப்பட்டுக் கிட்டிருக்க, அதே குற்றத்தால் பாதிக்கப்பட்ட மனுஷனோட உரிமை பத்தி யாரும் கவலைப்படறதில்லே. இதனால காவல் துறைக்கு விலங்கு போட்ட மாதிரி ஒரு சிச்சுவேஷன் உருவாயிருக்கு.

அப்புறம் புதுப் புதுச் சட்டங்கள் - போதைத் தடுப்பு, சைபர் குற்றத்துக் கெதிரா, குழந்தைகள் உரிமை / பெண் உரிமை காக்க அப்படின்னு வரிசையா சட்டம் வர, புதுப் புதுக் குற்றங்கள் புதுப் புதுக் குற்றவாளிகள்; ஜெயிலெல்லாம் ஃபுல்!

நீதித் துறையும் இதுக்கேத்த மாதிரி கியர் அப் ஆகலை. அரசு தரப்பு வழக்கறிஞர்களோட தரம் இம்ப்ரூவ் ஆகலை... நாட்டுப் பொருளாதாரம் முன்னேறியிருக்கு; ஆனா போலீஸ் இன்னும் ஏழையாவே இருக்கு.



• மருத்துவமனையில் சிகிச்சை பெறும் பிரின்ஸ் - அம்மாவுடன்...

# கபாலி ஜோக்கும்!

நாளை : இளைஞர்கள் - மாணவர்கள் காவல் துறைக்குப் பார்ட் டைம் வொர்க் பண்ணணும். உலகளாவிய டெரரிஸம் இந்தியாவோட பொருளாதார வளர்ச்சியைக் குறி வைச்சுத் தாக்கும். போலீஸ் இனிமே பூகோள எல்லைகளைக் கடந்து ஒரே அமைப்பா செயல்படணும். அப்போதான் பயங்கரவாதத்தை ஒடுக்க முடியும். ஷேர் மார்க்கெட்டுக்கு ஸென்ஸெக்ஸ் இருக்கிற மாதிரி காவல்துறைக்கு செக்யூரிட்டி இன்டெக்ஸ்னு ஒரு குறியீடு இருக்கணும்.

- இப்படி நிறைய ஐடியாஸ் அள்ளித் தந்தாங்க கிரண்பேடி.

கூல் ப்ளூ நிறத்துல சூட் போட்டுக் கிட்டிருந்தாலும் அவங்க பேச்சு வெரி ஹாட்!



—சுமி

## வட்டமேஜை

**பே**சாமல் அட்டையில் 'தமாக சிறப்பிதழ்' என்றே போட்டிருக்கலாம். அந்த அளவுக்கு சிறுகதைகளிலும், நகைச் சுவைத் துணுக்குகளிலும் சிரிப்பு கரை புரண்டு ஓடியது.

**- பி.எல்.பரமசிவம், புனலூர்**



# பேராசை அரசு!

'**ப**சியில் துடிப்பவனுக்குப் பஞ்சு மிட்டாய்' தலையங்கத்தில், பஸ் ஓட்டு வோம் ; ரயில் விடுவோம் ; எல்லைப்புறத் தில் ஆஸ்பத்திரி அமைப்போம் ; நல் லெண்ணத் தூதர்களை வரவேற்போம் என்ற வார்த்தைகள் அட்சர லட்சம் பெறும்.

**-எஸ்.ஆர்.ஹரிஹரன், சென்னை**

**ந**டிகை த்ரிஷாவின் பேட்டி ரொம்ப யதார்த்தமாக இருந்தது. அவரது வெள்ளை மனம் பளிச்சிட்டது.

**- இராஜேந்திரன், லால்குடி**

**வை**கோ சொல்வதுபோல் மூன்றா வது அணியால் மக்களுக்கு நல்லது நடந் தால் சரிதான்!

**- என்.பாலசுப்பிரமணியன், சென்னை**

**கா**ஞ்சி கிருஷ்ணாவின் 'வளம் தரும் வாஸ்து' பல வாஸ்து சந்தேகங்களைப் போக்கியது.

**- இ.கிருபா, சேலம்**

**கா**ஞ்சி கிருஷ்ணாவின் வாஸ்து தொடர், புதிதாக வீடு கட்டுபவர்களுக்கு ஒரு நல்ல வழிகாட்டியாக அமையும் என்பதில் ஐயமில்லை.

**- அ.சம்பத், திருவரங்கம்**

**உ**மாமகேஸ்வரியின் நகைச்சுவை கதை செம லகலக!

**- அலர்ஜி, கோவை**

**பெ**ட்ரோல் பைப்லைன் பற்றி தெரியாதவர்களுக்கும் தெரிய வைத்து விட்டீர்கள்.

**- வே.முருகேசன், சென்னை**

'**த**ர்மபுரி' படம் விஜயகாந்தை தமிழக முதல்வராக்கும் என்று கூறும் இயக்குநர் பேரரசு, ஒரு பேராசை அரசு!

**- த.சத்தியநாராயணன், அயன்புரம்**

'**கா**தல் சதுரங்கம்' தொடர் படிக்கப் படிக்க நல்ல விறுவிறுப்பு.

**- நஜ்முதீன், காயல்பட்டினம்**

Estd. 1989 ஸ்ரீசுந்தர விநாயகர் துணை உ. தேவதானப்பட்டி ஸ்ரீ காமாட்சி அம்மன் துணை

காலை காபி, 3 வேளை பிராமணாள் உணவு, தங்கும் வசதியுடன் 3 Tier இரயில் சுற்றுலாக்கள்.

-8-06 & 10-9-06 & 13-9-06 & 16-9-06 [illegible] & 17-10-06 (தீபாவளி சுற்றுலா) முதல் 10 நாட்கள் : டெல்லி-திரிவேணி-காசி-சாரனாத்-கயா-புத்தகயா-கல்கத்தா-பூரி-புவனேஸ்வர்-கோனார்க் ரூ. 4500

இத்துடன் ஆக்ரா-மதுரா-ஹரித்துவார்-ரிஷிகேஷ் உள்பட 13 நாட்கள் ரூ. 5490

இத்துடன் பண்டரிபுரம்-மும்பை உள்பட 16 நாட்கள் ரூ. 6990

8-8-06 & 13-9-06 & 11-10-06 முதல் 13 நாட்கள் : மதுரா-ஆக்ரா-பிருந்தாவன்-டெல்லி-ஹரித்துவார்-ரிஷிகேஷ்-பத்ரிநாத்-கேதார்நாத் ரூ. 5990

இத்துடன் திரிவேணி-காசி-கயா-கல்கத்தா-பூரி-புவனேஸ்வர்-கோனார்க் உள்பட 18 நாட்கள் ரூ. 7990

3-8-06 & 13-9-06 & 11-10-06 முதல் 12 நாட்கள் : மதுரா-ஆக்ரா-பிருந்தாவன் டெல்லி-குருக்ஷேத்திரம்-சண்டிகார்-சிம்லா-குளு-மணாலி-ரோத்தங்பாஸ்-வஷிஷ்டாபாத்-உள்பட ரூ. 6390

இத்துடன் அமிர்தசரஸ்-வாகாபார்டர்-ஜம்மு-வைஷ்ணவதேவி உள்பட 15 நாட்கள் ரூ. 7390

8-8-06 & 16-9-06 (Winter Season) முதல் 12 நாட்கள் : பூரி-புவனேஸ்வர்-கோனார்க்-கல்கத்தா-டார்ஜிலிங்-கேங்க்டாக் (சிக்கிம்) சங்குலேக்-பாபாமந்திர்-மந்தாகினி வாட்டர் பால்ஸ் உள்பட ரூ. 6490

தீபாவளி சுற்றுலாவில் : தீபாவளியன்று கங்கா ஸ்நானம் செய்து லட்டுத்தேர், தங்க விசாலாட்சி, தங்க அன்னபூரணி தரிசனம் செய்யலாம்.

அமர்நாத், அந்தமான், இலங்கை, சிங்கப்பூர், மலேசியா சுற்றுலாக்களுக்கு அணுகவும்

* L.T.C. ரசீது தரப்படும். II Tier A/c & III Tier A/c சுற்றுலா உண்டு

# சன் டிராவல்ஸ்

Prop. K. சிதம்பரம், B.Sc., B.Ed., செல் : 98421 - 56668

மதுரை : 3, தெற்கு மாசி வீதி, T.M. கோர்ட் (நாகலஸ் காபி எதிரில்) மதுரை – 1. போன் : 2341133

சென்னை : 30, நடேசன் தெரு, (சிவா-விஷ்ணு ஆலயம் அருகில்) T. நகர், சென்னை-17. போன் : 24359194, செல் : 98421-59194

திருப்பூர் : J.R. சந்திரசேகர், திருப்பூர். (கோவை, சேலம் மாவட்ட அன்பர்களுக்கு) செல் : 98428 96668

கும்பகோணம் : பிரசாத் போட்டோ ஸ்டுடியோ, 13-B, கோதண்டபாணி தெரு, கும்பகோணம். போன் : 0435 - 2433550

பெங்களூர் : S. பிரபாகரன், 38, சின் ஜெண்ட் ரோடு, Opp. : கேந்திரியா வரமுக்கம், பெங்களூர்-25. ☎ 25511690, செல் : 93412-10728






உடனே வீடு கட்டக்கூடிய சிறந்த மனைகள்.

வேகமாக உயரும் நில மதிப்பு.

ஆலோசனை தேவையிருக்காது.

## ஸ்ரீ சப்தகிரி கார்டன்ஸ்

(DTCP Approved Housing Plots)

கூடுவாஞ்சேரி

Near Power Grid Staff Quarters. (Under Progress)

## ஸ்ரீ வாசுதேவா நகர்

(DTCP Approved Housing Plots)

ஊரப்பாக்கம்

## M.S. சுப்புலட்சுமி நகர்

(DTCP Approved Housing Plots)

முடிச்சூர் ரோடு, மேற்கு தாம்பரம்

இலவசமாக மனையைப் பார்வையிட தொடர்பு கொள்க :

Ph : 28345104/105/106/107 Mobile:9380559391/9840622308

**BLB Estates (P) Ltd.**

SREE AUDISESHA BHAVAN

No. 21, Chinnaiah Street, T.Nagar, Chennai - 600 017.

(Opp. Hotel Accord Metropolitan, G.N. Chetty Road, &behind Nilgiris - Thirumalai Pillai Road)

E-mail : blbestmail@vsnl.net Web : www.blbestates.com

நன் மதிப்பில் முதலீடு

# தராசு

● ஆர்.ரங்கநாதன், சென்னை - 17

**? பார்லிமெண்ட்டில் 'மழைக்கால கூட்டத்தொடர்' என்று எப்படிப் பெயர் வந்தது?**

! வானம் இருண்டு வரும்; மின்னல்கள் பளீரிடும்; இடி முழக்கம் பயங்கரமாக இருக்கும்; மழை மட்டும் இலேசான தூறலுடன் நின்று போகும். நாடாளுமன்றத்தில் எப்போதுமே பிரதான எதிர்கட்சி இப்படித்தான் பொறுப்பில்லாமல் நடந்துகொள்ளும் என்பதால் இந்தப் பெயர் வைக்கப்பட்டிருக்கலாம்.

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

**? சத்யராஜ் பெரியாராக நடிக்கும் படத்துக்கு ரூ.95 லட்சம் தரப்போவதாக தமிழக அரசு அறிவித்திருப்பது பற்றி...?**

! ஒரு திரைப்படம் உயர்ந்த நோக்கங்களுடன் கலை உணர்வோடு சிறப்பாக எடுக்கப்பட்ட போதிலும் மக்கள் ஆதரவைப் பெருவாரியாகப் பெறாததால் நஷ்டம் ஏற்பட்டால், அப்போது அரசு ஓரளவு மானியம் தந்து உதவலாம். ஆனால், திரைப்படம் எடுக்க முன்கூட்டியே மானியம் தந்தால், அசிரத்தை உருவாகவும் படம் சோபிக்காமல் போகவும் வாய்ப்புகள் அதிகம்.

● இரா.இராஜேந்திரன், மயிலாடுதுறை

**? 'கேள்வி - பதில்' பகுதியில், சில கேள்விகளுக்கான பதில்களை வாசிக்கிறபோது, பதில்களைத் தயார் செய்து வைத்துக் கொண்டு கேள்விகளைத் தேடியதுபோல் தெரிகிறதே?**

! கேள்விகளைத் தேடுவதுபோல் கல்கி வாசகர்கள் வைத்துக் கொள்வதில்லை - மயிலாடுதுறை இராஜேந்திரன் உள்பட.

● ஆர்.ராஜதுரை, சீர்காழி

**? 'இம்சை அரசன்' படத்துக்கு, கர்நாடகத்தில் தடை விதிக்கப்பட்டுள்ளதே?**

! நல்ல நகைச்சுவை உணர்வை, அதீத பிராந்திய உணர்வு காரணமாக உதறித்தள்ளும் இம்சை அரசர்கள் இருக்கத்தான் செய்கிறார்கள். அதன் விளைவான தடை உத்தரவு.

● கவிதா ராஜேஸ்வரி, சென்னை

**? தமது தொண்டனை விஜயகாந்த் அறைந்தாரே... ஒரு தலைவனுக்கு இவ்வளவு கோபம் தகுமா?**

! கோபம் சர்வ நிச்சயமாகத் தப்பு. அதைவிட தப்பு, அதை நியாயப்படுத்தி, "நாங்கள் பால்ய நண்பர்கள்... சும்மா அடிச்சுப் பேசிக்குவோம்" என்று சமாளிக்கும் மழுப்பல் முயற்சி.

● மு.பெரியசாமி, விட்டுக்கட்டி

**? 'தீவிரவாதத்தை ஒடுக்க முடியாவிட்டால் ஆட்சியை விட்டு இறங்குங்கள்' என்று மத்திய அரசுக்கு பா.ஜ.க. தலைவர் வெங்கையா நாயுடு அறிவுரை கூறியிருப்பது பற்றி...?**

! சரியாப் போச்சு...! அப்படியானால் பா.ஜ.க. எத்தனைமுறை

* 'வற்புறுத்திய' வேண்டுகோள்!



* மழுப்பல் முயற்சி!



* பெரிய(ார்) பட்ஜெட்!



இம்சை அரசனுக்கு எழுந்துள்ள தடை

பதவி விட்டு இறங்கியிருக்கணும்! இது மாதிரி சந்தர்ப்பங்களில் அரசியல் பண்ற துக்குப் பதிலா, ஆலோசனை சொல்றது நல்லது... ஹூம்! இந்த அரசியல் தீவிர வாதத்தை யார், எப்படிக் கட்டுப்படுத்துவது?

● **எஸ்.கருணையானந்தம், உசிலம் பட்டி**

*? நாட்டில் வேலையில்லா திண் டாட்டம் அதிகரித்துவிட்டது. ஆனால் கிராமப்புறங்களில் விவசாய வேலைக்கு ஆள் கிடைப்பதில்லையே... முரண்பாடு அல்லவா?*

! விவசாயக் கூலிகளுக்கு, ஆண்டில் பல மாதங்கள் வேலை இல்லாமலே போகிறது. அதனால்தான் அனேகம் கிராமவாசிகள் பிழைப்பு தேடி நகரம் வருகிறார்கள். அதற்கேற்ப நகர்ப்புறத் தில் வேலைவாய்ப்பு பெருகுவதில்லை. எனவே, அங்கும் அவதி; இங்கும் அவதி. விவசாயம் சார்ந்த வேலை வாய்ப்பு களைச் சிற்றூர்களில் பெருக்குவது ஒன்றே பிரச்னைக்குத் தீர்வு.

● **ஜமீன் சின்னத்துரை, சங்கரன் கோயில்**

*? தற்போது புத்துயிர் பெற்றுள்ள உழவர் சந்தைகளை, 'உதவாத சந்தைகள்' என்று சிலர் வர்ணிக்கிறார்களே...?*

! உழவர் சந்தை உன்னத முயற்சி. நல்லது நடக்கிறபோது வரவேற்க மனப் பக்குவம் வேண்டும். அது எந்தச் சந்தையிலும் கிடைக்காது.

● **எம்.அசோக்ராஜா, அரவக் குறிச்சிப்பட்டி**

*? தமிழகத்தில் கல்வி கற்காதவர்களே இல்லை என்ற நிலையை உண்டாக்க கருணாநிதியால் மட்டுமே முடியும் என்கிறாரே இளங்கோவன்...?*

! விரைவில் உள்ளாட்சித் தேர்தல் வருகிறது. இனி கருணாநிதியை இளங்கோவன் புகழ்வார். கருணாநிதி சோனியாவை வியப்பார். ராமதாஸ் தயாநிதிக்கு 'ஜே' போடுவார். ஸ்டாலின் அன்புமணிக்கு வாழ்த்துச் சொல்லுவார். ஜால்ராக்களின் சப்தத் துடன் கச்சேரி பலமாக நடக்கும்.

● **கே.கணபதி, சென்னை - 11 ★**

*? மும்பை பிச்சைக்காரர்களுக்கு ஆண்டு ஒன்றுக்கான வருமானம் நூற்றி யெண்பது கோடியாமே...?*

! அப்படியானால் பிச்சைக்காரர் களின் எண்ணிக்கை எவ்வளவு; மும்பை யில் மட்டும் எத்தனை இந்தியர்கள் சுயமரியாதை துறந்து உழல்கிறார்கள்; எவ்வளவு மனித வளம் வீணாகிக் கொண் டிருக்கிறது? - இவற்றை மதிப்புப் போட் டால் நூற்றியெண்பது கோடியைப் போல் பல மடங்கு இருக்கும்.

● **ஏ.ஜி.முஹம்மது தௌபிக், மேலப்பாளையம்**

*? இலங்கை விமானப் படைக்கு இந்தியா வழங்கிய ரேடார்களைத் திரும் பப் பெற வேண்டும் என்று மன்மோகன்*



• அதீத பிராந்தியம்!

திரித்து...?

சிங்கைச் சந்தித்து வைகோ வற்புறுத்தியிருக்கிறாரே?

! ரேடார் என்பது அழிக்கும் ஆயுதம் அல்ல; முன்னெச்சரிக்கும் கருவி. வைகோவின் வற்புறுத்தல் ஈழத்தமிழர் சார்புள்ளது அல்ல; புலிகளுக்கு ஆதரவானது. பிரதமர், வைகோவைக் கண்டிக்காமல் தட்டிக்கொடுத்து அனுப்பி விட்டார். வற்புறுத்தலையும் கண்டு கொள்ள மாட்டார்.



* கண்டுகொள்ளாத கோரிக்கை!

● ஜோ.ஜெயக்குமார், நாட்டரசன்கோட்டை

? உண்மையிலேயே சிவாஜி சிலை, காந்தி சிலையை மறைக்கிறதா...?

! இல்லை, ஆனால் முக்கியத்துவத்தைக் குறைக்கிறது.

● குடடிபிரசன்னா, காந்தி கிராமம்

? கும்பகோணம் தீ விபத்தில் உயிரிழந்த குழந்தைகளுக்கு அறுபது லட்ச ரூபாய் செலவில் நினைவு மண்டபம் கட்டுவது தேவையா?

! மண்டபம் குழந்தைகள் நினைவாகத்தான் என்றாலும் சம்பவத்தையும் நாம் பொறுப்பில்லாமல் நடந்து கொண்டதையும் நினைவூட்டும். எதிர்காலத்தில் மறுபடி தவறு செய்யாதிருக்க எச்சரிக்கை விடுக்கும். ஆனால் ஒன்று, அறுபது லட்சம் செலவிட்டுக் கட்டப்படும் மண்டபம், குழந்தைகளுக்கு ஏதேனும் ஒரு வகையில் பயன்படுமாறு அமைய வேண்டும்.

● என்.கணேசமூர்த்தி, சிக்கல்

? மகளை வைத்துப் படம் எடுக்கும் டைரக்டர்களால் மட்டும் கவர்ச்சி இன்றி படம் எடுக்க முடிகிறதே... எப்படி?

! தொழில் அதர்மம் மீறப்படுகிறது.

● கே.தெய்வசிகாமணி, சென்னை-54

? ஜாதிப் பாசம் காரணமாக நீங்கள் ஜெயலலிதாவைச் சாடுவதில்லை என்று முரசொலி எழுதுகிறதே...?

! முரசொலி, கட்சி சார்புள்ள பத்திரிகை. அதனால் அதில் தப்புத் தாளங்கள் அடிக்கடி எழுவதில் வியப்பில்லை. கடந்த ஆண்டுகளில் அ.தி.மு.க. ஆட்சியை எந்த அளவுக்கு கல்கி விமர்சித்தது என்பதைப் பார்த்தால் ஜாதிப் பாசம் காரணமாக கல்கி நடுநிலை தவறுவதில்லை என்பது முரசொலி தவிர மற்ற எல்லோருக்கும் புரியும்

● அ.சுகுமார், காட்டுக்காணூர்

? முன்னாள் கால்பந்தாட்ட கேப்டன் 'சத்யன்' தற்கொலை பற்றி...

! சிறந்த விளையாட்டு வீரரான அவருக்கு மோசமான குடிப்பழக்கம் இருந்தது அதனால் 'டிப்ரஷன்' ஏற்பட்டதும் தெரிய வந்துள்ளது. ஆக, இந்தக் கோர முடிவுக்குக் காரணம் மது அரக்கன்.

* அரசியல் தீவிரவாதம்!

● உமரி பொ.கணேசன், மும்பை ☐

? நம் நாட்டில் நடக்கும் தீவிரவாதத்துக்கு பாகிஸ்தான்தான் காரணம் என்று தெரிந்தும் அவர்களிடம் நமக்கு உறவு ஏன்...?

! எதிரியை எதிரியாகச் சந்தித்துப் பெறுகிற வெற்றியைவிட, நண்பனாக்கிக் கொண்டு பெறுகிற வெற்றியில் இழப்புகள் குறைவு. இரண்டுவித வெற்றிகளுக்கும் தேவை அசாதாரண ராஜதந்திரம் (Strategy). ●

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
கே.கணபதி,
43, ராமகிருஷ்ணா தெரு,
சென்னை - 600 011.

☐ ரூ.100 பரிசு பெறுபவர் :
உமரி பொ.கணேசன்,
ஸ்ரீ நாராயணா ஸ்டோர்,
ஏ-114, மோதிலால் நேரு நகர்,
ஆண்டாப் ஹில், மும்பை - 37

புத்தக விமர்சனம்

# தணல்வாரி வீசலாமா?

**நொ**ண்டிக் காவடியில் ரௌத்ரம் பழகும் அக்னிக்குஞ்சாய் மாறிச் சுட்டெரிக்க முயற்சி செய்கிறார் யுகபாரதி.

போலிச் சாமியார்களைக் கழுவிலேற்றத் துடிக்கும் கவிதையைப் படிக்கும்போது, பெண்களின் குருட்டு நம்பிக்கையை நினைத்து மனம் தவிக்கும் அதே கணத்தில், முகத்தில் பூக்கும் புன்முறுவலை மறைக்க இயலவில்லை என்பதும் உண்மை.




அறியாமையால் ஆட்கொள்ளப்பட்டு, அறிவிலித்தனமான செய்கைகளைச் செய்பவர்களை வெகுண்டு சாடுகிறார் கவிஞர்.

என்ன சமாதானம் சொன்னாலும்...

**'நாடுனக்குச் செய்**
**யாது எதுவும்**
**நாட்டுக்காக நீ செய்**
**தற்கொலையாவது'**

- என்ற கவிதை வரிகளுடனும்

**'பாரதநாடு**
**பழம்பெரும்நாடு**
**நாமதன் புதல்வர்**
**நாசமாய்ப் போக'**

- என்னும் கவிதை வரிகளுடனும் எங்களுக்கு உடன்பாடில்லை.

'அட... நம்ம குஞ்சுக்குட்டி நல்லா நடக்குதே' என்ற தட்டிக் கொடுக்கும் வார்த்தைகளைக் கேட்டு, ஒன்றுமே அறியாத குழந்தைகள்கூட மேலும் நடைபயிலக் கற்றுக்கொள்கின்றன என்பது யதார்த்தமாக இருக்கும் பொழுது, அறியாமையில் உழலும் மக்களின் முகங்களில் இப்படித் தணல் கட்டிகளை வாரி வீசலாமா கவிஞர் என்கிற ஆதங்கம் எழுவதைத் தவிர்க்க இயலவில்லை.

'மூத்திரம் பெய்துவிடும் அரசியல்', 'நிம்மதியைப் பெற்றுக்கொள் திருவோட்டில்', 'யாரேனுமொரு வாழ்ந்து கெட்டவன்', 'தேடாமல் கிடைக்கிறது அநியாயம்' போன்ற எதிர்மறை கவிதை முடிவுகளுக்கு இடையில்,

**'ஓரங்கிழிந்த பாய்**
**காரை பெயர்ந்த சுவர்**
**ஒட்டடை படிந்த ஜன்னல்**
**ஓசை எழுப்பும் மின்விசிறி**
**கலைந்த தலையணை**
**கழுவாத பாத்திரம்**
**என்றாலும் என்வீடு இனிது**
**ஏனெனில் எதிர்வீடு உனது'**

போன்ற ஒரு சில ஒத்தடக் கவிதைகள் அங்-கங்கே காணக் கிடைப்பது ஆறுதல்.

**வ**ன்மையான சொற்கட்டுகளுடன் மதமாற்றம், அரசியல் அவலம், அரசு வேலை, சாதி பேதம், முட்டாள் பெட்டி, மக்களோடு சேராத மந்திரி, வேதாந்தம், தகுதியானவரை அடையாத அரசுச் சலுகைகள், வறுமை, மூடநம்பிக்கை ஆகிய இன்னபிற பாடு-பொருட்களின் மீது புனையப்பட்டுள்ள கவிதைகளின் தொகுப்பைப் படித்து முடிக்கும்போது கவிதை வடிவில் ஓர் இன்வெஸ்டிகேடிவ் ஜர்னலிச நூலைப்' படித்த உணர்வு மேலோங்குகிறது.

**- சுபா**

**நொண்டிக் காவடி - யுகபாரதி, நேர்நிரை வெளியீடு, D1/15, TNHB, தெற்கு சிவன் கோயில் தெரு, கோடம்பாக்கம், சென்னை - 24**



July 2006
06

ஜப்பான் உள்துறை அமைச்சரை நேற்று டோக்கியோவில் சந்தித்தேன். ஏதோ குச்சி என்று பெயர் முடியும். நினைவில்லை. சுமார் இரண்டு மணி நேரம் பேசினோம். நான் என்னென்ன பேச வேண்டும் என்று ஏற்கெனவே ரூல்டு நோட்டில் எழுதிக் கொடுத்திருந்தார்கள். அவர் எதையும் பார்க்காமல் பேசினார். குடிக்க ஜூஸ் கொடுத்தார்கள். நடுநடுவே தலையைத் தலையை ஆட்டினேன். சில பல சந்தேகங்களை எழுப்பினேன். பிறகு கைகுலுக்கிக் கொண்டோம். நான்தான் நன்றியுரை. எல்லோரும் கைதட்டினார்கள்.

காரில் போகும்போது என் செகரெட்டரி ஐந்து விஷயங்களுக்காக என்னைக் கடிந்து கொண்டார். 1) நன்றியுரைக்குப் பதிலாக அமெரிக்க ராணுவக் கோப்புகளிலிருந்து சில முக்கிய பக்கங்களைப் படித்துவிட்டேனாம். 2) நான் கைகுலுக்கியது அந்த அமைச்சரின் மனைவியுடனாம். 3) நைஸாக அவருடைய என்கேஜ்மெண்ட் ரிங்கை நான் சுட்டுக்கொண்டு வந்தது அவ்வளவு நன்றாக இல்லையாம். 4) அல்பம் மாதிரி ஆறு முறை ஜூஸ் குடித்தேனாம். 5) 'ஊருக்குப் போய் லெட்டர் போடுகிறேன்' என்று அவர் மனைவியிடம் கூறியது அந்த சிசுவேஷனுக்குப் பொருத்தமாக இல்லையாம்.

July 2006
08

ஹையா, இன்னிக்கு ஆபீஸ் லீவு. எண்ணெய் தேய்த்துக் குளித்துவிட்டு ஹாயாகப் படுத்துத் தூங்கப் போகிறேன். மத்தியானம் எழுந்து சாப்பிட்டுவிட்டு மீண்டும் தூக்கம். அப்புறம் போகோ சேனல், அப்புறம் கார்ட்டூன் நெட்வொர்க். நோ ஈராக். நோ லெபனான். நோ இங்கிலீஷ் ட்யூஷன். மொபைல் போனை அக்கு அக்காகப் பிரித்து மீன் தொட்டிக்குள் ஒளித்து வைத்து விட்டேன்.

(ஒரு மணி நேரம் கழித்து) டிரிங் டிரிங் டிரிங்... இந்தப் பாழாய்ப்போன போன் ஏன் அடித்துத் தொலைக்கிறது?

**மனைவி**: இந்தப் பாழாய்ப்போன ரிமோட் கண்ட்ரோலை யார் உடைச்சு மீன் தொட்டிக்குள்ளே போட்டது?



கற்பனை
மருதன்

July 2006
14

ஓ.பாக்ஸ் டி.வி.க்கு ஒரு பேட்டி கொடுத்தேன்.

நிருபர் : ஈராக்கில் என்ன நடக்கிறது?

நான் : என்னென்னவோ நடக்கிறது, நீங்கள் எதைப் பற்றி கேட்கிறீர்கள்?

நிருபர் : போர்.

நான் : ஆ!

நிருபர் : பயங்கர ஆயுதங்களைத் தேடித்தானே போனீர்கள்? கிடைத்ததா?

நான் : அது எங்கே இருக்கிறது என்பது பற்றி ஒரு துப்பு கிடைத்திருக்கிறது.

நிருபர் : எங்கே?

நான் : எது துப்பா?

நிருபர் : இல்லை, ஆயுதங்கள்...

நான் : கண்டுபிடித்த பிறகு அறிவிப்போம்.

நிருபர் : எப்போது கண்டுபிடிப்பீர்கள்?

நான் : கிடைத்தவுடன் கண்டுபிடிப்போம்.

நிருபர் : அமெரிக்கப் படைவீரர்கள் ஈராக்கைவிட்டு எப்போது வெளியேறுவார்கள்?

நான் : சம்மர் லீவு முடிந்தவுடன் திரும்பிவிடுவார்கள்.

July 2006
17

இந்த டைரியில் பல முக்கிய ரகசியங்களைப் பதிவு செய்திருக்கிறேன். யாரும் இதனைக் களவாடிவிடக் கூடாது. தொலைந்து போகவும் கூடாது. என்ன செய்வது?

ஒரு யோசனை. இந்த டைரியை ஆறு ஜெராக்ஸ் காப்பி எடுத்து, ஆறு இடங்களில் ஒளித்து வைத்துவிடலாம். (மீன்தொட்டி வேண்டாம்). பிறகு அந்த ஆறு இடங்கள் என்னென்ன என்பதை ஒரு வெள்ளைத் தாளில் எழுதி, அந்த வெள்ளைத்தாளை என்னுடைய ஆபீஸுக்கு ஃபாக்ஸ் செய்துவிட வேண்டும். பிறகு ஆபீஸுக்குப் போய் அந்த ஃபாக்ஸை ஆறு ஜெராக்ஸ் காப்பி எடுத்து, ஆறு இடங்களில் ஒளித்து வைத்துவிட வேண்டும் (ஒரிஜினலைத் தீயிட்டுக் கொளுத்திவிட வேண்டும்). அந்த ஆறு இடங்கள் இன்னின்ன என்பதை சங்கேத மொழியில் எழுதி, என் ஈ-மெயிலுக்கு அனுப்பிவிட வேண்டும். பிறகு என் லாப்டாப்பை ஒரு ரூமில் போட்டுப் பூட்டி, அந்தச் சாவியைத் தோட்டத்து புங்க மரத்தடியில் புதைத்துவிட வேண்டும். (பின்குறிப்பு - தோட்டத்தில் புங்க மரம் இல்லையாம். உடனே ஒன்று வாங்கச் சொல்லிவிட்டேன்.)

July 2006
24

மொத்தம் 36 இடங்களில் என்னுடைய டைரியை ரஷ்யர்கள் பறிமுதல் செய்திருக்கிறார்கள். நான் ஒளித்துவைத்தது 6 டைரிகளை மட்டுமே. புங்க மரத்தடியில் தோண்டிப் பார்த்துவிட்டேன், சாவி அப்படியே இருக்கிறது. இனி நான் டைரி எழுதப் போவதில்லை.

# ஜார்ஜ் புஷ்ஷின் டைரியிலிருந்து...

# "அ.தி.மு.க.வை ஜெ.வே அழிப்பார்!"

**சட்டமன்றத் தேர்தலுக்கு முன் தி.மு.கவில் இணைந்து தென் மாவட்ட அரசியலில் பரபரப்பூட்டிய சேடப்பட்டி முத்தையா, அ.தி.மு.க ஆட்சியில் சபாநாயகராக இருந்தபோது சசிகலாவுக்குச் சட்டசபையில் இடமளித்தது குறித்த சர்ச்சையில் சிக்கியிருக்கிறார். கொடைரோடு தோட்டத்திலிருந்தவரிடம் பேசினோம்...**

***பல வருடங்கள் அமைதியாக இருந்து விட்டு சட்டமன்றத் தேர்தலுக்கு முன் திடீரென்று தி.மு.கவில் இணைந்து விட்டீர்களே!***

"1996-ம் ஆண்டு நடந்த சட்டமன்றத் தேர்தலுக்குப் பிறகு நான் சற்று ஒதுங்கியே இருந்தேன். பின்னர் எனக்கு உடல்நலம் சரியில்லாமல் போய், மதுரை மீனாட்சி மிஷன் மருத்துவமனையில் அட்மிட் செய்தார்கள். கிட்டத்தட்ட மரண வாயிலை எட்டிப் பார்த்தேன். ஆனால் நான் அப்படிப் படுத்த படுக்கையில் இருந்தபோதும் ஜெயலலிதா என்னை வந்து பார்க்கவில்லை; குறைந்தபட்சம் என்னைப் பற்றி எதுவும் விசாரிக்கவில்லை. இத்தனைக்கும் எனது மகன்கள் அவருக்கு முறையாகத் தெரியப்படுத்தியும் கொஞ்சம்கூட மனிதாபிமானமில்லாத முறையில் 'கான்க்ரீட்' மனத்தோடு நடந்து கொண்டார். மாறாக, முதல்வர் கலைஞர், ஸ்டாலினை அனுப்பி உடல் நிலை விசாரித்தார். எதிர்முகாமில் இருந்தவன் என்று ஒதுக்கித் தள்ளாமல், கருணையுடன் விசாரித்த கலைஞரின் கனிவு என்னை உருக்கிவிட்டது. நான் திராவிட உணர்வுடன் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தின்போது தி.மு.கவில் இணைந்தவன் அப்படிப்பட்ட எனக்கு கலைஞ தலைமையே சரியான இடம் என்று முடிவெடுத்து நான் தி.மு.கவில் இணைந்து விட்டேன்."

***தி.மு.க ஆளும் கட்சியாக வந்தா ஏதேனும் பதவி கிடைக்கும் என் நோக்கத்தில் இணைந்தீர்களா?***

"கலைஞர் அவர்களை நான் ஏகமா வசைபாடியிருக்கிறேன். ஜெயலலித தலைமையில் செயல்பட்டபோது அடிமை நிலையில்தான் செயல்பட வேண்டியிருந்தது. அதற்காகப் பல்வேறு தலைகுனிவுகளையும், அவமான களையும் தாங்கிக்கொள்ள வேண்டியு வந்தது. எதையும் மனத்தில் வைத்து கொள்ளாமல், என்னை முழு அன்புட அரவணைத்துக் கொண்டார் கலைஞர் அந்த அன்பும், பாசமும் மட்டும் போதும் எந்தப் பதவியும் வேண்டாம்; எதி பார்க்கவுமில்லை."

***நீங்கள் சட்டப் பேரவைத் தலை வராக இருந்தபோது நடந்த எம்.ஜி.ஆர் படத் திறப்பு நிகழ்ச்சியில், சசிகல சட்டசபைக்கு வந்து துணை சபாநாயக இருக்கையில் அமர்ந்ததற்கு நீங்கள்தா காரணம் என்று ஜெயலலிதா அறிக்கை விட்டிருக்கிறாரே!***

"இது போன்ற வடிகட்டிய பொய்யை ஜெயலலிதா மட்டுமே சொல்ல முடியும் சட்டசபையில் எம்.ஜி.ஆர். படம் திறக் முடிவு செய்தபோது, நான் 'வழக்கமா சட்டசபையில் படங்கள் திறப்ப என்றால் ஜனாதிபதி, பிரதமர் ஆ யோரை வைத்துத்தான் திறப்பார்கள் எனவே நாம் ஜனாதிபதியாக இருக்கு

ஆர்.வெங்கட்ராமனைக் கூப்பிடலாமே!' என்றேன். நான் இப்படிச் சொன்னதும் 'எந்த வெங்கட்ராமனைச் சொல்கிறீர்கள்? அவருக்கு என்ன தகுதியிருக்கிறது! எம்.ஜி.ஆர். படத்தைத் திறக்க எனக்கு மட்டுமே தகுதி இருக்கிறது' என்று கத்தினார். பின்னர் படத்திறப்பின்போது, அவரும் சசிகலாவும் வந்தார்கள். என்னிடம் அதிகாரிகள் கேட்டபோது, 'சசிகலாவை மேல் மாடத்தில் உட்கார வையுங்கள்' என்றேன். இது ஜெயலலிதாவுக்குத் தெரிந்துபோய், 'அட்வகேட் ஜெனரல் சுப்பிரமணியமெல்லாம் கீழே உட்கார்ந்திருக்கும்போது சசிகலா ஏன் மேலே போய் உட்கார வேண்டும்? கீழேயே உட்கார வையுங்கள்' என்று அவரது உதவியாளரிடம் சொல்ல, சசிகலாவை அவர் உள்ளே அழைத்து வந்தார். சசிகலா வருவதைப் பார்த்த துணை சபாநாயகர் எழுந்து நின்று ஒதுங்க, அந்த இருக்கையில் உட்கார்ந்தார் சசிகலா. இதுதான் நடந்தது. இந்த மரபு மீறலுக்கு முழு காரணம் ஜெயலலிதாவே. அந்தப் படத்திறப்பு விழாவுக்கு ஜானகி அம்மையாருக்குக்கூட அழைப்பு அனுப்பவில்லை. எம்.ஜி.ஆர். படம் திறக்கப்பட்டபோது கைதட்டினேனே தவிர, மற்றபடி கைக்கட்டி, வாய் மூடிய நிலையில்தான் செயலாற்ற முடிந்தது. எம்.ஜி.ஆர். கட்டிய இயக்கத்தைக் காப்பாற்ற வேண்டும் என்ற ஒரே வைராக்கியத்தில் எல்லாவித இழிவுகளையும் தாங்கிக் கொண்டேன்."

**உங்கள் மீது ஜெயலலிதாவுக்கு என்ன கோபம்?**

"சசிகலாவை போயஸ் தோட்டத்திலிருந்து அனுப்பினால்தான் கட்சியைக் காப்பாற்ற முடியும் என்று சொன்னேன். இதைச் சொன்னதால் கழுத்தறுப்பு வேலையில் இறங்கினார் சசிகலா. அவரது ஆதிக்கம்தான் இன்னமும் அங்கே தொடர்கிறது. திண்டுக்கல் சீனிவாசனைப் பொருளாளர் பதவியிலிருந்து தூக்கிவிட்டு டி.டி.வி. தினகரனைப் போட்டிருக்கிறார் ஜெயலலிதா. இதுவும் சசிகலாவின் வேலைதானே!"

**அ.தி.மு.கவை உடைக்கவே உங்களைப் பயன்படுத்தப் போகிறார் கலைஞர் என்கிறார்களே!**

"அ.தி.மு.கவை எதற்காக உடைக்க வேண்டும்? அது ஏற்கெனவே அழிவுப் பாதையில்தானே போய்க் கொண்டிருக்கிறது. அ.தி.மு.கவை குழி தோண்டிப் புதைக்கும் வேலையை ஜெயலலிதாவே செய்து முடிப்பார். வேறு யாரும் தேவையில்லை. நான் சொல்ல விரும்புவதெல்லாம் 'எம்.ஜி.ஆர். தொண்டர்களுக்கு ஏற்ற இடம் தி.மு.க.தான்! உடனே அதில் வந்து இணையுங்கள்' என்பதுதான்!"

**- ப்ரியன்**






சிவாஜி சிலையைப்
பார்க்க கும்பலா
கூட்டி வந்துட்டு
தனியா விட்டுட்டுப்
போயிட்டாங்களே!

படம் : ஸ்ரீஹரி




# இதம் தந்து
# ரணம் ஆற்றும்




# சைபால்

## BEST SKIN OINTMENT

எரிச்சல் தரும் வெட்டுக்காயத்தின் மேல் சைபால் தடவுங்கள். எரிச்சலைப் போக்கி இதம் தரும். காயம் இருந்த சுவடே காணாமல் போகும்.

---

வெட்டுக்காயம், முகப்பரு, சேத்துப்புண், வேனல்கட்டி, பித்தவெடிப்பு முதலிய வியாதிகளுக்கு சிறந்தது.

---

Mfrs.
**THE SOUTH INDIAN MFG. CO.,**
**MADURAI - 20. Ph: 2534108**



**சைபால்: எல்லோர் வீட்டிலும் இருக்கவேண்டிய ஒன்று**

